


# COMPREHENSIVE CARDIAC SERVICES

- BALLOON ANGIOPLASTY
- NON-BALLOON ANGIOPLASTY
- VALVULOPLASTY
- PACE MAKER IMPLANTATION
- CARDIAC SURGERY
- NUCLEAR CARDIOLOGY
- ECHOCARDIOGRAM
- ELECTRO PHYSIOLOGY WORK UP
- CARDIAC STENTING
- ATHERECTOMY




## TAMILNAD HOSPITALS

Cheran Nagar, Madras - 601 302

Ph : 2375221. Fax : 044-2375229

Insight-950

| ADYAR CITY CENTER | ADAMBAKKAM FAMILY CLINIC |
|---|---|
| 30, 1st Main Road, Gandhi Nagar, Madras - 600 020. Ph : 4914013, 4919778 | 3, Vellalar Street, Madras - 600 088. Ph : 2340182 |

**INFORMATION CENTERS**

| TAMBARAM | TIRUVANNAMALAI | SALEM |
|---|---|---|
| 115, Mudichur Road, Madras 600 045. Ph : 2367908 | 3, Unnamalai Amman Illam, Tiruvannamalai 606 601 | 25-D, Ramakrishna Road, Opp: L.R.N. Bus Stop, Salem 636 007 |
| **ERODE** | **TRICHY** | **COIMBATORE** |
| 372-E E.V.N. Road, (Mettur Road) Erode 638 009. Ph : 216727 | A-18, 1st Floor, XI Cross Main Road, (Opp : Bank of Madura), Thillai Nagar, Trichy 620 018. Ph : 32049 | 185, Ravindranath Layout, New Siddhapudur, GP Hospital Back Side, Coimbatore 641 044 |

# ஏன் விலகினார் எஸ்.வி.சேகர்?

**ஜீ**.ச.சி. சாடிலைட் டெலிவிஷன் தொடங்கி ஓராண்டு கூட முடியவில்லை. முதலில் அதிலிருந்து சோ விலகினார். சில நாட்கள் முன்பு கங்கை அமரன் விலகினார். இப்போது எஸ்.வி.சேகர். இதற்கு என்ன காரணம்?

ஜீ.ச.சியில் 'மெட்ரோ' பிரியாவின் ஆக்கிரமிப்பு ரொம்ப ஓவராக இருப்பதால், மனம் வெறுத்துப்போய் எஸ்.வி.சேகர் விலகி விட்டார் என்று ஒரு பேச்சு. அது நிஜமா?

'**ஓ** ப்ரியா! ப்ரியா!' நிழச்சி ஷூட்டிங்கிலிருந்த ப்ரியா விடமே கேட்டபோது, "என்ன சார்! இப்படி அபாண்டமாய்ச் சொல்கிறீர்களே! ஜீ.ச.சியில் நிகழ்ச்சி இயக்குனராகப் பொறுப்பேற்ற எஸ்.வி.சேகர்தான், சன் டீ.வி.யில் இருந்த என்னை அழைத்தார். அதனால் தான், நானே ஜீ.ச.சிக்கு வந்தேன்!



• 'இனியே நாங்கதான்' - நிகழ்ச்சியில் சேகர்

சேகர் ரொம்ப நல்லவர். அவருக்கும் நிர்வாகத்துக்கும் ஏதோ பிரச்னை. அவருக்குப் பொறுப்பைக் கொடுத்து விட்டாலும், செயல்பட சுதந்தரம் தரப்படவில்லை என்றுதான் நான் கேள்விப்பட்டேன்.

"வாரத்தில் நான் வழங்குவது அரை மணிநேர நிகழ்ச்சி. நான் ஆக்கிரமிப்பு செய்கிறேன்; அதனால் தான் சேகர் விலகினார் என்பது சுத்தப் பொய்" என்றார் ப்ரியா.

**ச**ரி! சேகர் என்ன சொல்கிறார் என்று தெரிந்து கொள்ள அவர் வீட்டுக்குப் போனோம்.

"பாவமய்யா அந்தப் பொண்ணு! என் விலகலுக்கும் அவங்களுக்கும் சம்பந்தமே இல்லை" என்று உறுதிப் படுத்தினார்.

பிறகு என்ன தான் காரணம்?

"சோ விலகிய பின் என்னை அந்த பொறுப்புக்குக் கூப்பிட்டபோதே நான் சொன்னேன்: 'என் பொறுப்பை நான் சின்சியராய் நிறைவேற்றுவேன். அனாவசியத் தலையீடு இருந்தால் என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது.'

"நான் நிகழ்ச்சி இயக்குனராகப் பொறுப்பேற்ற பின், பத்து புதிய நிகழ்ச்சிகளை அறிமுகப்படுத்தினேன். என்னால் ஜீ.ச.சியின் பாபுலாரிடி அதிகரித்தது என்று அடித்துச் சொல்லுவேன்! எஸ்.வி. சேகரை மக்கள் சின்னத்திரையில் பார்க்கவே விரும்புகிறார்கள். நடிகர் எஸ்.வி. சேகருக்கு நிர்வாகப் பொறுப்புகள் அவசியமில்லை என்று உணர்ந்தேன். அதிலிருந்து விலகி விட்டேன். ஜீ.ச.சியில் என் நிகழ்ச்சிகள் தொடரும்" என்கிறார்.

**டெயில் பீஸ் வம்பு :**

**ஜீ**.ச.சி நிகழ்ச்சி இயக்குநர்களின் தொடர் விலகல்களுக்குக் காரணம் – நிர்வாகத்தில் ஏகமாய் மூக்கு நுழைக்கும் அம்மாவின் ஆசி பெற்ற ஒரு ஐ.ஏ.எஸ் அதிகாரிதானாம்! முருகா! முருகா!

— நமது நிருபர்



# அசுரன்

வேற்று கிரகத்திலிருந்து பூமிக்கு யாராவது வருவது; பூமியிலுள்ள மனிதர்களை அழிக்க நினைப்பது; கடைசியில் ஹீரோ அவர்களை ஒழித்துக் கட்டுவது என்பது விஞ்ஞானக் கற்பனைகள் தோன்றிய காலத்திலிருந்தே இருந்து வரும் கதை.

நம் கோலிவுட்காரர்கள் அதற்கு வீரபத்ரன், சந்தனக் கடத்தல், வீரம், பாட்டு, சென்டிமென்ட் என்று காரம், மணம், குணம் சேர்த்து வெளியிட்டிருக்கிறார்கள். அதுவும் இந்தப் புண்ணிய கைங்கரியத்தைச் செய்திருப்பது செல்வமணி யூனிட்.

அதனால் பிரும்மாண்டத்துக்குக் குறைவில்லை. ஆனால் படத்தில் ஹீரோ அருண்பாண்டியனா, மன்சூரலிகானா என்ற லட்ச ரூபாய் கேள்வி கடைசி வரை இருக்கிறது.



அருண்பாண்டியன் துப்பாக்கியை வைத்துக் கொண்டு விதம் விதமாய் போஸ் கொடுக்கிறார். தெலுங்குப்படம் மாதிரி, ஒரு கொலை ஆனவுடன் ஒரு பாட்டு, பாட்டு ஆனவுடன் ஒரு சென்டிமெண்ட் என்று சூப்பர் மிக்சர். வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் ரோஜா, விசித்ரா, விஜயகுமார், ராதாரவி போன்றவர்கள் நடிக்க முயன்றிருக்கிறார்கள். ஆக்ஷன்தான் முக்கியமென்பதால், இவர்களை யாரும் குறை சொல்லக் கூடாது.

லொகேஷனுக்காகக் கடுமையாக உழைத்திருக்கிறார்கள். காடு, மலை, பள்ளத்தாக்கு என்று ஏறாத இடமெல்லாம் ஏறி, உற்சாகமாய்ப் படம் பிடித்திருக்கிறார்கள்.

உருப்படியாகக் கதை என்ற விஷயம் ஏதும் இல்லாததால் எந்த பிரும்மாண்டமும் எடுபட மாட்டேனென்கிறது.

லாஜிக் பற்றி யோசிக்காமல் பார்ப்பதென்றால், அரேபியன் நைட்ஸ் பார்த்த திருப்தி கிடைக்கும்.

— துளசி

# Life

You have wants
You have needs
You have dreams
You have plans
For your son
For your daughter
For your family
For your business
For yourself

You want to live life to the full. You want to face the challenges with equanimity and a sense of purpose

You want opportunities
You want growth
You want fulfillment
You want long success
You want happiness
You want all
What are you waiting for ?

Annamallai Finance gives it all

- FIXED DEPOSITS
- HIRE PURCHASE
- LEASING
- CORPORATE FINANCE
- OTHER FINANCIAL SERVICES




- PART OF THE Rs. 500 CRORE BANNARI AMMAN SUGARS GROUP
- OVER Rs.50 CRORE IN DEPOSITS
- PERSONALISED SERVICE

**AWARDED FA + BY CRISIL**



## ANNAMALLAI FINANCE LTD

Regd Office : 252, Mettupalayam Road, Coimbatore - 641 043

**YOUR PROSPERITY IS OUR CONCERN**

SASI 752 / 95

Contact Telephone Nos: • **Bombay**: 2843602 • **Bangalore**: 2227365 • **Coimbatore**: 231797 • **Delhi**: 5752417 • **Ernakulam**: 360425 • **Erode**: 79400 • **Gobichettipalayam**: 22924 • **Karaikudi**: 23029 • **Kozhikode**: 58837 • **Madurai**: 33710 • **Madras**: Spencer Plaza Branch: 8522538 Anna Nagar Branch: 6263447 T.Nagar Branch: 4340248 Mylapore Branch: 4992903 • **Pondicherry**: 38507 • **Pollachi**: 4595 • **Pune**: 627178 • **Salem**: 419513 • **Sathyamangalam**: 20420 • **Tirunelveli**: 25144 • **Trichy**: 43304 • **Vellore**: 26371 • **Villupuram**: 23780

(This Advertisement is persuent to the statutory Advertisement released in The Hindu dated 29.06.1995)

**Deposit Mobilisation Extended Upto September 95'**

# சென்ணை புரத்து ராஜா!

இது இளையராஜா குடும்பத்தின் இளைய தலைமுறை களத்தில் இறங்க ஆரம்பித்திருக்கிற நேரம். இளையராஜாவின் புதல்வர் கார்த்திக் ராஜா இசையமைப்பாளராகிறார். எடுத்த எடுப்பிலேயே இரண்டு படங்கள்! ஒன்று - ராஜ்கிரணின் 'மாணிக்கம்'. இன்னொன்று, பஞ்சு அருணாசலத்தின் படம்.

ரகுமான் கொடிகட்டிப் பறக்கிற இந்நேரத்தில், கார்த்திக்கின் வரவு கூர்ந்து கவனிக்க வேண்டியதாகிறது. ரகுமானைப் போலவே இளைஞர். ரகுமானைப் போலவே சாந்த சொரூபி. ரகுமானைப் போலவே 'மௌனம்' விரும்பி.

ஆனால் இசைப்பாணி!

அது நிச்சயம் அப்பா வழியில் இருக்கும்!

ரொம்ப கூச்ச சுபாவமாகத் தெரிகிறார். பேட்டி என்றால் வெகு தயக்கம்.

"என் படம் இன்னும் ஒண்ணு கூட வரலியே? அதுக்குள்ள..." என்று இழுத்தாலும் ஒப்புக் கொண்டு விட்டபடியால் ஓரிரு வார்த்தைகளாவது பேசுகிறார்.

பள்ளிப்படிப்பை முடித்துவிட்டு நேரடியாக இசைத் துறைக்கு வந்திருக்கிறார். முதலில் அப்பாவுக்கு உதவியாக அவரது இசைக்குழுவிலேயே கீ-போர்ட் வாசித்து, ரீ-ரெக்கார்டிங்கில் ஒத்துழைத்து...



• சென்னைபுரத்து ராஜா

'பாண்டியன்' படத்தில் 'டய்யலாலா'வை உருவாக்கியது கார்த்திக்கின் முதல் இசையமைப்பு அனுபவம். அப்போதே பஞ்சு அருணாசலம், முழுப்படத்துக்கு இசையமைக்க வாய்ப்பு தரத் தயாராக இருந்திருக்கிறார். "இன்னும் கத்துக்கட்டும்" என்பது அப்போது இளையவரின் கருத்தாக இருந்திருக்கிறது!

தந்தை இசைமேதையாக இருப்பதால் இசைத்துறை சம்பந்தப்பட்ட பல சௌகரியங்கள். ஒளி மற்றும் ஒலி நாடாக்கள், புத்தகங்கள், நூதன கருவிகளுடன் பரிச்சயம் என்று அடிப்படை வசதிகளுக்கும் குறைவில்லாத தால வளமான அடித்தளம்!

தவிர, இயல்பாகவே கர்நாடக, இந்துஸ்தானி, மேற்கத்திய இசைகளில ஆர்வம் அதிகம். கிராமிய இசையில் கொஞ்சம் கூடுதல்.

ஆனாலும் பண்ணைபுரத்து மண்ணில் பலகாலம் புரண்டு புழங்கியதால் இளையராஜாவுக்கு அந்த இசை, ரத்தத்தோடு ஊறிய

ஒன்று. கார்த்திக்குக்கு எப்படி? முற்றிலும் சென்னைபுரத்தில் பிறந்து, வளர்ந்தவர்..

"அதனாலென்ன? ஆர்வம் இருக்கிறது. அக்கறையுடன் கற்று வருகிறேன்."

மேற்கத்திய இசையின் தாக்கம் இன்று மிக பலமாக இருப்பது குறித்தெல்லாம் கார்த்திக் கவலைப் படுவதாகத் தெரியவில்லை.

"அவரவர்களுக்குப் பிடித்ததை ரசிக்கிறார்கள். இசையின் எல்லா வடிவங்களுக்கும் எல்லா இடங்களிலும் எப்போதும் ரசிகர்கள் இருக்கவே செய்கிறார்கள்" என்கிறார்.

கார்த்திக்குக்குப் பிடித்த இசையமைப்பாளர்கள்?

கேட்டதும் வெகு பாது காப்பாக நழுவி விடுகிறார்.

"பீத்தோவான், பாக், மொஸார்ட் .... தவிர தியாகராஜ சுவாமிகளும்!"

கவனியுங்கள்

"இப்போது இசையமைப்பவர்களில்?"

"யாரும் ஞாபகம் வரலே!"

அப்பா கூடவா?

கேட்கவில்லை.

• பண்ணைபுரத்து ராஜா

"இந்துஸ்தானியில் பங்கஜ் உதாஸ், அனுப் ஜலோடா சிறந்த கம்போஸர்கள். இங்கே பாடுபவர்களில் பி.சுசிலாவும் ஜானகியும் ரொம்பப் பிடிக்கும்" என்று சொல்கிறார்.

கார்த்திக்கின் முதல் படத்தில் எட்டு பாடல்கள் வரப்போகின்றன. இன்னும் ரெக்கார்டிங் தொடங்கவில்லை.

**“ அவரவர்களுக்குப் பிடித்ததை அவரவர் ரசிக்கிறார்கள். இசையின் எல்லா வடிவங்களுக்கும் எல்லா இடங்களிலும் எப்போதும் ரசிகர்கள் இருக்கவே செய்கிறார்கள். ”**

"உங்கள் தங்கை பவதாரிணி பாடி ரெக்கார்ட் ஆனதாகச் செய்தி வந்ததே?"

"அது 'பிட்' ஸாங். பூஜைக்காகப் பதிவு செய்யப்பட்டது. படத்தில் இடம் பெறுமா என்பது சந்தேகமே!" என்றார்.

"அதிர்ஷ்டத்தில் எனக்கு மிக நம்பிக்கை உண்டு" என்கிறார் கார்த்திக்.

மாஸ்ட்ரோ அப்பாவாகக் கிடைத்ததும் அதிர்ஷ்டம் தானே?

— ஜி.எஸ்.எஸ்

அட்டையில்: கார்த்திக்குடன் பவதாரிணி.

வண்ணப்படம்: யோகா.



அடக்கமாக அழகாக ஒரு ஃபிளாட் வேணுமே!



சொந்த வீடு வேணும்னு ஆசைதான். ஆனால், மொத்த பணமும் கொடுக்க முடியாதே...



எங்க குடும்பம் பெரிசு... கொஞ்சம் பெரிய ஃபிளாட்டா வேணுமே...?



ஃபிளாட்தான் என்றாலும் அழகாக இருக்க வேண்டாமா?



நேரத்தோட எந்த பில்டர்ஸ் முடித்துத் தராங்க.....?



தரமான கட்டமைப்புன்னு நம்பி வாங்க முடியுமா?

உங்கள் அனைத்து கேள்விகளுக்கும் ஒரே விடை : எஸ்டி அசோசியேட்ட் பில்டர்ஸ். சென்னை நகரில் டிலக்ஸ் ஃப்ளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க முன்னணி நிறுவனங்கள் மூலம் கடன் வசதி பெற, சுலபத் தவணைகளில் வீடு வாங்க, மேலும் விவரங்கள் அறிய தொடர்பு கொள்ளுங்கள்.




# YESDE ASSOCIATED BUILDERS LIMITED

2nd Floor, 26,
Ranganathan St.,
T.Nagar,
Madras - 600 017.
INDIA
Ph: Off: 4340224/ 4340210.
Res.: 2345244
Fax: (044) 2344333

# ஒரு ரிஸ்ட் வாட்ச் 99,000 ரூபாய்!

உடன் பிறவா சகோதரிகளுக்கென்றே நடத்தப்பட்டதுபோல் ஒரு கண்காட்சி சமீபத்தில் பம்பாயில் ஜகஜ்ஜோதியாக நடந்து முடிந்தது. அழைப்பிதழ் உள்ளவர்களுக்கு மட்டுமே அனுமதி என்ற நிலையிலும் மீன் மார்க்கெட் பிச்சை வாங்கும் படியான கும்பல் அந்த சர்வ தேச நகைக் கண்காட்சியில்!

நுழைவாயிலிலேயே அசத்தியிருந்தார்கள்... ஒவ்வொரு நகை டிசைனரும், தங்கள் தயாரிப்புக்கு எது 'இன்ஸ்பிரேஷ'னாக இருந்தது, எப்படி வடிவமைத்தோம் என்பதைச் சித்திர வடிவில் அமைத்திருந்தார்கள்!

உடுக்கை, திரிசூலம், வேல் போன்ற புராதன, கடவுள் கைகளில் இருக்கிறவைகள் காதணிகளாகவும், சங்கு-சக்கரங்கள் மோதிரமாகவும், பாம்பு, கருடன், அன்னம் போன்ற வாகனங்களை 'ஸாரி பின்'களாகவும் வடிவமைத்து கண்காட்சியையே தெய்வீகமாக்கிவிட்டார்கள்!

உள்ளே ஸ்டால்களில் தங்கம், வைரம், முத்துக்கள் காய்கறி மாதிரி குவிக்கப்பட்டிருந்ததும் டிசைன்களில் நுணுக்கமான சாகச வடிவமைப்பு செய்யப்பட்டிருந்ததும்-உள்ளே நுழைந்தவர்கள் வெளியேற விடாமல் செய்து விட்டன!

ஒரு சாம்பிள் பாருங்கள்- முழுதும் வைரக்கற்கள் பதித்த ஒரு ரிஸ்ட் வாட்ச், வந்திருந்த அத்தனை பேரையும் வாய் பிளக்கச் செய்தது... விலையைக் கேட்டு மூர்ச்சை அடையாதீர்கள்- ரூ.99,000/-.

''உன் மாப்பிள்ளைக்கு, இதை வாங்கி பிரசன்ட் பண்ணலாமே?'' என்று தம் தோழிக்கு ஸ்க்ரூ கொடுத்துக் கொண்டிருந்தார், ஒரு பெண்! அத்தனை விலை கொடுத்து வாங்கவும் ஆள் இருக்கிறார்கள்!

தில்லியைச் சேர்ந்த கன்னா என்ற வியாபாரி ஒரு கலக்கு கலக்கிக் கொண்டிருந்தார். 'Uncut precious stones' என்ற வகைகளில் -வைரங்கள் மட்டுமின்றி மரகதம், கோமேதகம், நீலம், கார்னெட், பிங்க்மீனா என்று விதவிதமாக வைத்திருந்தார். கடைச் சிப்பந்திகளே நடமாடும் மாடல்களாக விதவிதமான நகையலங்காரத்துடன் வலம் வந்தது, பார்க்க வெகு ரம்மியம்!

சர்வதேசக் கண்காட்சி எனினும் பெரும்பாலும் நம் நாட்டுக்காரர்களின் ஆக்கிரமிப்புதான் அதிகம். அயல் நாடுகள் வரிசையில் அரபு நாடுகள், இத்தாலி, பெல்ஜியம் என்று சிலவே இருந்தன.

ஸ்ரீலங்காக்காரர்கள், தம் ப்ளூ டயமண்ட் நகைகளில் புரட்சி பண்ணியிருந்தார்கள். வைரம் கட்ட எல்லோரையும் போல தங்கம், வெள்ளியை உபயோகிக்காமல், 'கார்பனை'யே (வைரமே ஒரு கார்பன்!) பயன்படுத்தியிருந்தார்கள்!



கார்பனில் பதித்த வைரங்கள் - ஸ்ரீலங்கா ஸ்பெஷல்!



கூட்டம் அதிகம் இருந்தாலும் வாங்குபவர்கள் குறைவு என்று பேசிக் கொண்டார்கள். இதே, அரபு நாடுகளில் நடந்திருந்தால் மொத்த ஐட்டங்களும் காலியாகியிருக்கும் என்றார் ஒரு வியாபாரி.

ஸ்டால் வைக்க ஒரு நாள் வாடகை பதினோராயிரம் ரூபாய் என்பது வியப்பாக இருந்தது. இன்னொரு வியப்பு- நம்ம ஊர் பிரபல நகைக் காரர்கள் ஒருத்தரையும் காணோம்!

பம்பாயிலிருந்து:

**ஜெயஸ்ரீ ராஜ்.**

3

# ஒரு பூட்டு இரண்டு மனைகள்

கல்லூரியில் படிக்கும் போது சவால்களை ஏற்பது என்பது ஸ்டார் டீ.வியில் வருகிற 'கிரிஸ் டல் மேஸ்' அனுபவம். எல்லோருக்கும் அப்படி தோன்றாது. இன்பசாகரனுக்கு கை கால்கள் பா பரக்கும். படிப்பிலே அவன் சராசரி. ஸ்போர்ட்ஸில் கோப்பைகள் குவிப்பான். என்.சி.சி. யூனிஃபார்மில் மார்ச் பாஸ்ட் முடிந்து கேஷுவலாக வரும் போது பரந்த மார்பையும் பம் மிய புஜங்களையும் மை தீட்டிய விழிகள் ஊடு ருவும். முத்து முத்தாய் துளிக்கும் நெற்றி வியர் வையை ஒற்றி எடுக்க விரும்பி கைக்குட்டை அவர்கள் விரல்களிடையே படாதபாடுபடும்.

அவர்களில் அனுபமா ஒருத்தி. "ரொம்பத் தான் வழியறாடா" என்று இவன் நண்பர்கள் அப்பால் சொல்லிச் சிரிக்கும் அளவில், ஏதோ அதிமுக்கிய காரியம் போல் நெருங்கி வரு வாள். ஒன்றுமில்லாத விஷயத்தை பேசிப் போவாள்.

"ஃபிரீயாத்தான் பழகும்; தொட்டா மர வட்டை மாதிரி சுருண்டுக்கும்" - சங்கரன் கமெண்ட்.

"ஒரு சாலன்ஜ் வாத்தியாரே?" - ரமேஷ்.

"என்ன?" என்றான் இன்பா.

"அனுவை அழைச்சிக்கிட்டு சினிமா போறே - மாட்னி."

"மாட்னி என்னடா, மகாபலிபுரமே போவேன்!"

"ஆமா போவாரு! 'பீஸைட் ரிஸார்ட்'டெல்லாம் இவனை நம்பித்தானே கட்டியிருக்காங்க!"

கொல்லென்ற சிரிப்பினிடையே, "புரூஃப் கொண் டாறணும் வாத்யாரே, சாட்சியம் இல்லேன்னா கேஸ் டிஸ்மிஸ் ஆயிடும். தோற்றுப் போனதாகத்தான் அர்த்தம்!"

"தோல்விங்கறது நம்ம அகராதிலே கிடையாது. ஆனா உன்னோட இண்ட் ஸுஸுகி தேவைப்படும்" என்றான் ராஜனைப் பார்த்து. அப்போது இன்பசாகரனிடம் யமாஹா கிடையாது. பல்லவனே கதி. "என்னடா தயங் கறே?"

"ஹீட் தாங்குமா?"

"ஏண்டா தாங்காது? மகாபலிபுரம் என்ன, மத்தியப் பிரதேசத்துலயா இருக்கு? அதிகபட்சம் போனா முப்பத்தஞ்சு மைல்."

"நான் அதைச் சொல்லலே பிரதர்; உங்க காதல் சூட்டை என் மோட்டார் பைக் தாங்கணுமே!"

அட்டகாசமாகச் சிரித்தார்கள். இன்பாவை உசுப்பி விட்டார்கள். அவர்களின் சவால் இவனை வளைத்துப் போட்டது. அவன் ஆண்மைக்கே ஒரு சோதனை யாகி விட்டது.

அனுபமாவை அணுகு வதோ, பேசுவதோ அவனுக் குக் கஷ்டமாக இல்லை. 'எங்கே எங்கே' என்று காத் துக் கிடந்தவளாக மகாபலி புரம் பிக்னிக் திட்டத்தை உடனடியாக ஏற்றாள்.

"உனக்கு என்ன பிடிக் கும்? பண்ணி எடுத்து வரேன்" என்றாள்.

"வீட்டிலே கேள்வி கேட்க மாட்டாங் களா?"

"காலேஜ்ல பிக்னிக் போறதா சொல்லப் போறேன். நாம ரெண்டு பேர் மட்டுமேன்ற விவரம் அவங் களுக்கு ஏன் தெரியணும்?" கண்கள்

கி. ராஜேந்திரன்

எதிர்பார்ப்பில் நட்சத்திரங்களாக மின்னின. குவி அதரங்கள் குறுநகையில் விரிந்தன.

இன்பா இண்ட் ஸுஸுகியைக் கிளப்பி விட்டுக் காத்திருந்தான். அவள் தடுமாற்றத்துடன் தான் பில்லியனில் அமர்ந்தாள். "மெல்லப் போ; எனக்கு முன் அனுபவமில்லே." அவன் தனக்குள் சிரித்துக் கொண்டு, "வலது கையால் தோளைப் பிடிச்சுக்க, இடது கையால பில்லியனுக்குப் பின்னால் இருக்கிற பாரைப் பிடிச்சுக்க" என்றான். மெல்லச் செலுத்தி, மகாபலிபுரம் சாலையை அடைந்த பிறகு படிப்படியாக வேகம் கூட்டினான். நெருங்கி இயல்பானாள்.

கடற்கரை யோர ஓட்டல் ஒன்றினுள் நுழைந்த போது கூட அவள் தவறாக ஏதும் எண்ணவில்லை. "எதுக்கு இதெல்லாம்? ரொம்ப செலவாகுமே?" என்றாள்.

"தினமுமா செலவழிக்கப் போறோம்? ஒன்ஸ் இன் எ புளூ மூன்! இவ்வளவு தூரம் ஓட்டி வந்தது டயர்டா இருக்கு; ஷவர்ல குளிச்சு, அரைமணி ரெஸ்ட் எடுத்துட்டு பீச்சுக்குப் போகலாம்."

"ஆமா, ஒரே புழுதி" என்றாள். அவன் படு கேஷுவலாக மாற்றுப் பெயர், விலாசம் எழுதி அறை எடுத்ததை ரசித்தாள். துளிக்கூட பதற்றமின்றி அட்வான்ஸ் தந்தான்.

அறைக்குள் நுழைந்த பிறகுதான் தனிமை திடீரென்று அவளைத் தாக்கியது. மிரண்டு திரும்பியவள், அவன் புன்னகையுடன் தன்னை நெருங்குவதைக் கண்டாள். "வே... வேண்டாம் இன்பா... நான் சொல்றதைக் கேளு... ஐ ரியலி லவ் யூ!"

"நானும்தான்... அதனால்தான்" என்றான். தோள்களைப் பற்றினான். அவன் கரங்கள் தேட ஆரம்பித்த போது, இலவசமாக எல்லா ஓட்டல் அறைகளிலும் மிஷனரிகளால் வைக்கப்படுகிற பைபிள், தற்செயலாக அவள் கண்களுக்குத் தென்பட்டது. கட்டிலருகே டேபிள் லாம்ப் பக்கத்தில் இருந்தது. வாயடைத்துப் போயிருந்த அவளுக்கு அதைப் பார்த்ததும் என்ன பேசுவது என்று தெரிந்து போயிற்று.

"மதர் தெரஸா என்ன சொல்லியிருக்காங்க, தெரியுமா?"

"என்ன?" அவன் கழுத்தருகே குனிந்து, பரவசமாகிக் கேட்டான்.

"எந்த ஒரு பெண்ணும் தன் கணவனுக்கு முதலிரவன்று தரக்கூடிய மிகப் பெரிய பரிசு தனது கன்னித்தன்மையே."



அவன் சிரித்தான். "அதை நானும் படிச்சிருக்கேன். அது, அவங்க அமெரிக்கா போன போது அங்குள்ள பெண்களுக்குத் தந்த அட்வைஸ். அங்கே ஃப்ரீ லவ் ஜாஸ்தி."

"அது உலகில் எந்தப் பெண்ணுக்கும் பொருந்தக்கூடிய அறிவுரைதான், இன்பா."

"ஆண்களுக்கு காஸனோவா தந்திருக்கிற அறிவுரை ஒண்ணு சொல்லவா?"

"இன்பா, ஸ்டாப் இட்! உன்னை சாகும் வரை நான் காதலிப்பதற்குப் பதில், வாழ்நாள் முழுவதும் வெறுக்கும்படி பண்ணி விடாதே!"

ஜில்லென்று தலையில் – முகத்தில் உணர்ந்தான். தண்ணீர் குடுவையை அவன் மீது கவிழ்த்திருந்தாள். அத்துடன் காமம் கரைந்து போயிற்று. பாத்ரூமிலிருந்து டவல் எடுத்து துடைத்துக் கொண்டான்.

"கம், லெட்ஸ் கோ" என்றான்.

**பி**க்னிக்கை மறந்து சென்னை நோக்கி விரைந்தது ஸுஸுகி.

'சவாலைப் பற்றிக் கூறி ஒரு பிராவைக் கடன் பெறலாமா?' என்று ஒருகணம் யோசித்தான். 'அந்தப் பொய்யான வெற்றி கூட இவளை அவமானத்தில்தானே ஆழ்த்தும்? அதற்கு இவள் எப்படி ஒப்புதலளிப்பாள்?' என்று தானே தர்க்கவாதம் செய்து அந்த எண்ணத்தை ஒதுக்கினான்.

தோல்வியை ஏற்று நான்கு நண்பர்களுக்கு கஸாட்டா ஐஸ்கிரீம் வாங்கித் தந்தான். அத்துடன் அனுபமா மீது இருந்த 'கிளாமர்' போய் விட்டது. பணக்கார வீட்டுப் பெண் சாயாவுக்கு ஓ.கே. சொன்னான்.

**வி**ஷயம் கேள்விப்பட்டதும் அனுபமா துடித்துப் போனாள். அப்பாவிடம் வெட்கத்தை விட்டுப் பேசி, இன்பசாகரனின் பெற்றோரைப் பார்த்து வர அனுப்பினாள்.

"டேய் இன்பா! என்னடா இதெல்லாம்!" என்றார் ரங்கநாதன்.

"என்னங்க... கண்காட்சிக்குப் போகும் போது நீங்க இந்தச் சட்டையைப் போட்டுட்டுப் போகலையே.... ஏது இது?"

"கூட்ட நெரிசலில் சட்டை மாறிடுச்சு!"

– எஸ். எஸ். பூங்கதிர்





"எனக்கே ஆச்சர்யமா இருக்குப்பா. கோ எஜுகேஷன் காலேஜ்ல கேர்ல்ஸும் பாய்ஸும் ஃப்ரெண்ட்லியாத்தான் பழகுவாங்க. அதைக் காதல்னு தப்பர்த்தம் பண்ணிக்கிட்டா என்ன செய்யறது, சொல்லுங்க!"

மாமல்லபுரம் பிக்னிக் பற்றிப் பேச அனுவுக்குத் தைரியம் வரப் போகிறதா என்ன? அது அவளையும்தானே பாதிக்கும்?

அவமானத்தைத் தாங்கிக் கொண்டு, அப்பா அம்மாவின் திட்டுக்களை வாங்கிக் கட்டிக் கொண்டு அவனைத் தனிமையில் வந்து சந்தித்தாள்.

"ஐ ஆம் ஸாரி அனு" என்றான். "உன்னைக் கல்யாணம் செய்துகிட்ட பிறகு ஒவ்வொரு முறை உன்னை நெருங்கும் போதும் அன்றைய தினம் நினைவு வரும். அந்தத் தோல்வி, அன்றைய அவமானம், அந்தக் குற்ற உணர்ச்சி, அவற்றோடு என்னால் வாழ முடியாது."

"ஐ ஹேட் யூ இன்பா" என்றாள். "நீயே தப்பு செய்துட்டு, அதுக்காக நீயே பழிவாங்கறே! உன்னை அடியோடு வெறுக்கறேன். ஆனா துரதிர்ஷ்டம் என்னன்னா, ஐ ஆல்ஸோ லவ் யூ. நேற்று, இன்று, நாளை எப்பவும் இந்தக் காதல் மாறாது."

அப்புறம் அவள் கல்யாணத்தை மறந்து படிப்பைத் தொடர்ந்து ஃபாரின்ஸிக் விஞ்ஞானத்தில் நிபுணத்துவம் பெற்று உத்யோகத்தில் அமர்ந்த போது, இன்பா ஐ.பி.எஸ். கேடரிலிருந்து சி.பி.ஐயில் நுழைந்து ஒரு வருஷம் ஆகியிருந்தது.

அவளைத் தன் உத்யோகம் தொடர்பாகவே ஆய்வுகளுக்காக ஓரிரு தடவைகளில் சந்திக்க நேர்ந்திருக்கிறது. ஒவ்வொரு முறையும் இதேபோன்ற வரவேற்புதான். 'வரவேற்பா, வேண்டாவெறுப்பா' என்று புரியாத முக பாவம்தான்.

**அ**வள் அறையின் வாசலிலிருந்து உள்ளே திரும்பினாள். அவன் பின்தொடர்ந்தான்.

"இப்ப என்ன?"

"பாம் ப்ளாஸ்ட்."

"திருவல்லிக்கேணி குண்டுதானே! பேப்பரில் பார்த்தேன்."

பொட்டலத்தை மேஜை மீது வைத்தான்.

"குண்டு வைத்தவன் சிதறிப் போனான். ஒரு கை மட்டும் துண்டாக எதிர் வீட்டு மொட்டை மாடியில் கிடைச்சது." பொட்டலத்தை சுட்டிக்காட்டி, "உன் ஆராய்ச்சியில் என்ன தெரியுது, பார்க்கணும்."

"உன்னோட பர்ஸனல் ரிக்வெஸ்ட்டா? அஃபிஷியலா?"

"எப்படி வேணும்னாலும் வைச்சுக்க."

"அது முடியாது; அஃபிஷியல்னா நான்

அனுமதி பெறணும். சுதந்திரமா இயங்கிய ஃபாரின்ஸிக் டிபார்ட்மெண்டை போலீஸ் இலாகாவுக்குக் கீழே கொண்டு வர தீவிர முயற்சி நடக்குது."

"ஏன்?"

"உன்னைப் போல மத்திய அரசைச் சேர்ந்தவங்க உதவி கேட்கறீங்க. நாங்க ஒத்துழைக்கிறது மாநில அரசுக்குப் பிடிக்கலே. மேலும்..."

"என்ன...?"

"இங்கே போலீஸ் கேட்கிற மாதிரியான சாட்சியங்களை நாங்க உருவாக்கறதில்லே... அவங்களுக்கு வசதியா ரிப்போர்ட் எழுதித் தரதில்லே. நாங்க கண்டறிஞ்ச உண்மையை சொல்றோம். அது போலீஸுக்கு - உயர் அதிகாரிகளுக்கு - அவங்களுக்கு மேலே இருக்கிற அரசியல்வாதிகளுக்குப் பிடிக்கலே. அதனால் இந்த இலாகாவின் நிர்வாகப் பொறுப்பையே போலீஸ் துறையிடம் ஒப்படைச்சுட்டா அவங்க இழுத்த இழுப்புக்கு நாங்க ஆடணும்தானே!"

"என்ன அக்கிரமம்? நீ இதுக்கு சம்மதிப்பியா?"

"வேற என்ன செய்யறது? அநியாயம் எங்க இல்லே? மத்திய அரசிடம் இல்லையா? உங்களிடம் இல்லியா?"

"பர்ஸனலா போகாதே."

"இல்லே; உங்க சி.பி.ஐ.யைச் சொல்றேன். அனுமதிக்கப்படற விஷயத்துலதானே தீவிரம் காட்டறீங்க? அனுமதி மறுக்கப்படும் காரியங்களிலே கண்ணை மூடிக்கிறீங்க!"

"சப்ஜெக்டுக்கு வருவோம். அஃபிஷியலா உதவ முடியாதுன்னாலும் தனிப்பட்ட முறையில் எனக்கு நீ உதவலாம் இல்லியா?"

"அதுவும் ரிஸ்க் இருக்கு. சர்க்கார் செய்து தந்துள்ள வசதிகளை அதிகாரபூர்வமாயில்லாமல் சொந்தப் பொறுப்பில் நான் பயன்படுத்தறது தப்பு."

"அதிகாரபூர்வமா சி.பி.ஐ. உதவி கேட்டா போலீஸ் டிபார்ட்மெண்ட் மறுக்கும்; தமிழக அரசு நழுவும்."

" 'ப்ளீஸ், எனக்காக ரிஸ்க் எடுத்துக்க அனு'ன்னு வாய் விட்டுத்தான் கேளேன்."

"அதை நான் கேட்காமலே நீயே செய்து தருவேன்னு எதிர்பார்த்துட்டிருக்கேன்."

"நீ கேட்டு நான் செய்தா எனக்கு நீ கடமைப்பட்டுப் போவே; அது கூடாது. நானே முன் வந்து உதவணும். அப்புறம் என் கதி என்ன ஆனாலும் பரவால்லே! அதானே?"

"அப்படித்தான் வைச்சுக்க. ஐ டோண்ட் கேர். காரியம் ஆனா சரி."

"சுயநல புத்தி துளிக்கூட மாறலை. அப்படியேதான் இருக்கு."

"ஏன், முடியாதுன்னு சொல்லிட்டுப் போயேன். அந்த சாமர்த்தியமும் உனக்கு



"அந்த பேஷண்ட்கிட்ட, 'கல்யாணத்துக்குப் பிறகு தலைமுடி நரைக்காது'ன்னு சொன்னீங்களே, அது எப்படி டாக்டர்?"

"கல்யாணம் ஆயிட்டா தலையில முடி எங்கே இருக்கப் போகுதுங்கிற தைரியம் தான்!"

— சீர்காழி. ரேவதி

இருக்கே. வேணும்னா மகாத்மா காந்தி பொன்மொழி ஒண்ணை எடுத்து விடு!"

"முடியாதுன்னு மறுக்க எல்லா சூழ்நிலைகளிலும் ஒரே அளவுகோலைக் கையாள முடியாது. இப்ப உனக்கு உதவணும்னுதான் என் மனசு கிடந்து அடிச்சுக்குது."

"ஏன்?"

"ஏன்னா நான் ஒரு முட்டாள். உன்னை இன்னமும் காதலிக்கிற முட்டாள்."

அவன் அடி உதட்டைக் கடித்து அனுதாபத்தை விழுங்கினான். "ரெண்டு நாள்ல ஆள் அனுப்பறேன். ரிப்போர்ட் கொடுத்து விடு."

"ஆள் அனுப்பிப் பெற முடியாது; உனக்கு வேணும்னா நீயேதான் வரணும். நேரில் வந்து கைநீட்டணும்."

"நீ பிச்சை போடுவியாக்கும். ஓ.கே. நீ இன்னும் அழகாத்தான் இருக்கே. அடிக்கடி உன்னை வந்து பார்க்கறதுலே கண்ணுக்கு உறுத்தல் இல்லே" என்று சிரித்து அவளுக்கு முதுகுகாட்டினான்.

"மாமி சௌக்கியமா?" என்றாள். "முழுகிட்டுத்தான் இருக்காங்களா, இல்லே ஏதாவது நியூஸ் உண்டா?"

அவன் உறைந்தான். மெல்லத் திரும்பி, கண்களில் தீப்பொறி பறக்க, "யூ ஆர் எ டெவில்" என்றான். "கோல்கேட் சிரிப்புடன் கூடிய பைசாசம்!"

"கரெக்ட்! நீதான் தேவதூதன்!" என்றாள் புன்னகை மாறாமல்.

அவன் கதவை அறைந்து சாத்தி வேகமாக நடக்க, பியூன் திடுக்கிட்டு நின்று திருதிருவென்று விழித்தான்.

அவள் புன்னகை மங்கி மறைய, பாதியில் நிறுத்தியிருந்த சோதனையைத் தொடர, டெஸ்ட் டியூபை இரு விரல்களால் பற்றி எடுத்தாள். அந்தக் கோப அழுத்தம் தாங்காமல் டெஸ்ட் டியூப் உடைந்து, கண்ணாடி அவள் விரலைப் பதம் பார்க்க, ரத்தம் சிந்தியது.

(தொடரும்)

# "ஓய்வு பெற்ற பிறகு எனது உழைத்து சம்பாதித்த பணத்தை பல்வேறு திட்டங்களில் முதலீடு செய்தேன்.

*ஆனால் அந்த பணத்திற்கு உயர்ந்த மதிப்பை தரக்கூடிய திட்டம் ஏதேனும் உள்ளதா ?"*

# பென்ஷனர்ஸ்

## பெருமைமிகு

## தி·ட்·ட·ம்



ஆம். ஓய்வு பெற்ற அல்லது அதற்கென திட்டமிடும் உங்களைப் போன்றவர்களுக்காகவேயென பல்வேறு சிறப்பம்சங்கள் நிறைந்த திட்டம். ஆயின் எவ்வகையில் இத்திட்டம் உங்களது பணத்திற்கு அதிகபட்ச மதிப்பை பெற்றுத் தருகிறது ? இனி நீங்களே அறிந்து கொள்ளுங்கள்.

டெபாசிட் செய்யப்பட்ட ஒவ்வொரு ரூ. 10,000/- தொகைக்கும் (குறைந்த பட்சம் 3 வருடங்கள்) வருடத்திற்கு 24 சதவிகிதமென வட்டி கணக்கிடப்பட்டு டெபாசிட் செய்யப்பட்ட காலம் முழுவதிற்குமான வட்டித் தொகை முன் தேதியிட்ட மாதாந்திர காசோலைகளாகப் பெற்றிடுங்கள். மேலும் டெபாசிட் காலம் முழுவதும் வருடத்திற்கு ஒரு முறை ஒரு சதவிகிதம் சிறப்பு ஊக்கத் தொகை உங்களுக்கு அளிக்கப்படும். அதுமட்டுமின்றி மூன்றாவது வருட முடிவில் மூலதனத் தொகையில் 25 சதவிகிதம் ஊக்கத்தொகையாக பெறுவதற்கான வாய்ப்பு.

இவை மட்டுமா. . . ?

ஆம். . . இன்னும் உண்டு. உதாரணமாக இத்திட்டத்தின் கீழ் டெபாசிட் செய்த ஒரு நபர் துரதிஷ்டவசமாக டெபாசிட் முதிர்வடைவதற்கு முன்பாகவே இறக்க நேரிடின் நடைபெறுவது என்ன ? அவரது நெருங்கிய உறவினரோ அல்லது வாரிசுதாரரோ டெபாசிட் கால முதிர்வின் போது சாதாரணமாக 25 சதவிகிதத்திற்கு பதிலாக சிறப்பாக 50 சதவிகித ஊக்கத் தொகையினைப் பெற்றிட வழியுண்டு.

மொத்தத்தில் ஈஸ்வரியின் பென்ஷனர்களின் பெருமை மிகு திட்டம் உங்களது தேவைகளை மற்றவர்களைக் காட்டிலும் சிறப்பாக புரிந்துக் கொண்டுள்ளது.

உங்களுக்காகவேயென அமைந்த அருமையான திட்டமாக இது உங்களுக்கு தோன்றுகிறதல்லவா ?

மேற்கொண்டு விபரங்களுக்கு நேரிலோ அல்லது தொலைபேசி மூலமோ தொடர்பு கொள்ளுங்கள். பிறகு பணத்திற்கான அதிக மதிப்பைக் கண்டுணர்ந்திடுங்கள்.




## ஈஸ்வரி ஃபைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

தலைமை & நிர்வாக அலுவலகம் : 4, எல்டாம்ஸ் சாலை, முதல் மாடி, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018. தொ.பே: 455349, 459557, 457583. கிளை அலுவலகம்: பாரிமுனை தொ.பே: 560767, தி. நகர் தொ.பே: 8259661, புரசைவாக்கம் தொ.பே: 5324937, 5324940, குரோம்பேட்டை தொ.பே: 405845, திருவல்லிக்கேணி தொ.பே: 841187, நங்கநல்லூர் தொ.பே: 2345891, சாலிக்கிராமம் தொ.பே: 428650, பாண்டிச்சேரி தொ.பே: 31830.

எல்லா ஞாயிறு அன்றும் அலுவலகம் இயங்கும்.

உ ங் க ள் வ ள ர் ச் சி ஈ ஸ் வ ரி யு ட ன் வ ள ர ட் டு ம் .

LOTUS/95

● சாப்பாடு – 50பைசா; தேநீர் – 6பைசா; காப்பி – 10பைசா; டிபன் வகை எதுவாயினும் 10 பைசா...
அடேயப்பா! எங்கே இந்த அசகாய விலைகள்? திருச்சி BHEL நிறுவன கேன்டீனில் தான்!

–எஸ். ஹனீபா, எடமலைப்பட்டிபுதூர்.

● ஹிந்தி நடிகை ஹேமமாலினி, 'ஜென்டில் மேன்' மதுபாலா இருவரும் திருச்சிக்கு அருகிலுள்ள ஜீயபுரத்தைச் சேர்ந்தவர்கள். இருவரும் உறவினர்கள் கூட! (ரொம்ப முக்கியம்!)

– எம். கதிஜா ஹனிபா, திருச்சி–16.

● திருச்சி, தில்லை நகர் பத்தாவது கிராஸ் அருகில் உள்ள ஒரு தெருவின் பெயர் – தூக்கு மேடை!

–எச். சபீதா நேசன். திருச்சி–3.

● துறையூருக்கு அருகே சங்கம்பட்டி என்ற கிராமத்தைச் சேர்ந்த ஒருவர், தம் மகனுக்கு 'போலந்து' என்று பெயர் வைத்திருக்கிறார்! திருப்பதி, பழனி, சிதம்பரம் கேள்விப்பட்டிருக்கிறோம். இது வித்தியாசமாக இல்லை?

● 'காலைக்கடம்பர், மதியானச் சொக்கர், அந்தி திருவேங்கிநாதர்' என்பது திருச்சி மாவட்டத்தில் புழங்கும் ஒரு பழமொழி. கடம்பர் எழுந்தருளியுள்ள கடம்பந்துறை (குளித்தலை)யைக் காலையிலும், சொக்கநாதர் வீற்றிருக்கும் சிவாய மலையை (அய்யர் மலை) மதியத்திலும், திருவேங்கி நாதர் அருளாட்சி புரியும் திருஈங்கோய் மலையை மாலையிலும் வழிபட்டால் நல்ல பலன் உண்டு என்பது நம்பிக்கை.

தெற்கே உள்ள வாட்போக்கி, சிவபெருமான் உருவிலும், வடக்கே உள்ள ஈங்கோய் மலை பார்வதி உருவிலும் இடையிலுள்ள குளித்தலை, கந்தவேள் உருவிலும் இருப்பதால், இம்மூன்றையும் ஒரே நாளில் வழிபடுபவர், 'சோமாஸ்கந்தரை' வழிபட்ட பயனைப் பெறுவதாகச் சொல்வார்கள்.

– துறை. ஏ. ரமணன், துறையூர்.



● தேவராயனேரியிலுள்ள ஒரு டீக்கடையில் வித்தியாசமாக ஒரு வாசகம் வைத்திருக்கிறார்கள். "தினத்தந்தியில் வரும் கன்னித்தீவு முடியும் வரை கடன் கேட்காதீர்கள்!"

– மூ. கருணாநிதி, தேவராயனேரி.

● தமிழ் இலக்கியங்களில் மிகுந்த ஈடுபாடும் சற்று வித்தியாசமாகச் சிந்திப்பவருமான என் நண்பர் ஒருவர், ஒருதரம் சொன்னார்: "தமிழகத்தின் முதல் தொட்டில் குழந்தை ஆண்டாள்!"

'தன்னை நிராகரித்து விட்டவர்கள் மீது கோபமும், தன்னை உலகம் அங்கீகரிக்க வேண்டும் என்ற பேரார்வமும் காரணமாய், வலுவான தமிழ்க் கவிதைகளைப் படைத்திருக்கிறார். பெரியாழ்வாரிடம் வளர்ந்த சூழலும் இதற்கு உதவியிருக்கிறது' என்றார் அவர். வித்தியாசமாக இல்லை?

– ரிஷபன், ஸ்ரீரங்கம்.




● அண்மையில் பி.பி.சி. சேனலில் ஒரு நிகழ்ச்சி காட்டினார்கள். ஜிம்பாப்வேயில், கொம்புகளுக்காக காண்டாமிருகங்களை வேட்டை ஆடுவதில் 'நூதனமான கருணை' கடைபிடிக்கிறார்கள். ஹெலிகாப்டரிலிருந்து, கீழே காடுகளில் உலவும் காண்டாமிருகங்களின் மேல் மயக்க ஊசியை சுடுகிறார்கள். பின், மயங்கி விழுந்த காண்டா மிருகங்களின் அருகே போய், பாட்டரி பொருத்தப்பட்ட ரம்பங்கள் கொண்டு, கொம்புகளை நோகாமல் அறுத்து எடுத்துக் கொண்டு, விஷ முறிவு ஊசியைச் செலுத்தி விடுகிறார்கள்! அவையும்

ஒன்றும் நடவாதது போல் எழுந்து ஓடிவிடுகின்றன!

நம் நாட்டிலும் மிருகங்களை, அவற்றின் கொம்பு, தந்தங்களுக்காகக் கண்மூடித்தனமாக வேட்டை ஆடும் வழக்கம் இருக்கிறது. மிருகங்களின் மேல் கருணை கொண்டு, ஏன் இம்முறையைக் கடைபிடிக்கத் தொடங்கக் கூடாது?

—எல். சத்யா, திருச்சி-2.

● இன்று, மத நல்லிணக்கம் பெரிய அளவில் பேசப்படுகிறது. ஆனால் எத்தனையோ வருடங்களுக்கு முன்னால், நம் முன்னோர்களால் அது சிறப்பாகக் கடைபிடிக்கப்பட்டு வந்ததுதான்! ஸ்ரீரங்கநாதர் மேல் ஈடுபாடு கொண்ட ஒரு முஸ்லிம் அரசகுமாரிக்கு, ரங்கநாதர் ஆலயத்தில் தனி சந்நிதியே உண்டு! துலுக்க நாச்சியார் என்று அன்போடு வணங்கப்படும் இவருக்கு நைவேத்தியமாக புளியோதரையோ, பொங்கலோ அல்ல; கோதுமை ரொட்டி, வெண்ணெய், பீடா என்று அவர்கள் வழக்கப்படியே படைக்கிறார்கள்!

– எஸ். பட்டம்மா, ஸ்ரீரங்கம்.

● பெரம்பலூரில் சென்ற வருடம் 'பாக்யா அதிர்ஷ்ட கம்பெனி' என்ற போலி நிறுவனம், '100 ரூபாய் கட்டினால் 200 ரூபாய் பொருட்கள்' என்று விளம்பரம் செய்தது. மக்கள், போட்டி போட்டுக் கொண்டு 1000, 2000 என்று பணத்தைக் கொட்ட, முதல் ஒருவாரம் ஒழுங்காகப் பொருட்கள் சப்ளை செய்த அந்நிறுவனம் ஒருநாள் இழுத்து மூடிக் கொண்டு, மூட்டை கட்டிக் கொண்டு போய் விட்டது!

வெறுத்துப் போன மக்கள், கதவு, பூட்டு, ஜன்னல் என்று அகப்பட்டதைப் பெயர்த்துக் கொண்டு போனார்கள்!

ஏமாந்த சில பெண்கள் என்ன பேசிக் கொண்டார்கள் தெரியுமா?

"சே! ஒரு வாரம் முன்னாடியே கட்டியிருக்கணும்!"

நம் மக்கள் என்றுதான் திருந்துவார்களோ!

– சி. செல்வராஜ், பெரம்பலூர்.

● ஆசியாவில் நிரந்தரப் பகைவனும் இல்லை;
நண்பர்களும் இல்லையாம்.
ஏன் நாம் மட்டும்
நிரந்தர ஏமாளிகளாய்?

– ஒட்டத்தம் சங்கர், திருச்சி-8.

---

திருச்சி துணுக்ஸ் இந்த இதழுடன் முடிகிறது. சிறந்த துணுக்குக்காக (இந்த இதழில் ஹெலிகாப்டரிலிருந்து ஊசி..)

ரூ. 100/- பரிசு பெறுபவர் : எல். சத்யா, 61, பட்டர்வர்த் ரோடு, திருச்சி - 2.

● " 'அகர முதல எழுத்தெல்லாம்
ஆதிபகவன் முதற்றே உலகு' — இதிலிருந்து
நீ என்ன அறிகிறாய்?"

"டைரக்டர் பாலசந்தரின் படம் சார்!"

– எஸ். குருமூர்த்தி, திருச்சி-21.

● "நீ கொலை செய்தது உண்மையா?"

"நானே எல்லாத்தையும் சொல்லிட்டா சஸ்பென்ஸே இல்லாம பூடும். நீங்களே கண்டுபிடிங்க எசமான்!"

– எம். கதீஜாஹனிபா, திருச்சி-6.

● "டைரக்டர் 'மேக்கப்' வேணாம்னு சொன்னதுக்கு அந்த நடிகை ஏன் கோச்சிக்கிட்டுப் போறாங்க?"

"பேய் வேஷமாயில்ல!"

– ஜெயந்தி சுந்தரம், திருச்சி-6.

● "சுண்டல் விலையை ஏம்பா ஏத்திட்ட?"

"பொட்டலம் கட்டித்தர்ற நியூஸ்பிரிண்ட் விலை ஏறிடிச்சே சார்!"

—லீலா, திருச்சி-21.

"நான் தகவல் தராமலே, வந்து திருடனை புடிச்சிட்டீங்களே!"

"இப்ப உட்டா, இவன்ட்ட மாமூல் வாங்க முடியாது சார்!"

–புத்தூர் சாந்தி, திருச்சி-17.

● "அடடா, நம்ம அமைச்சருக்கு என்ன தேசபக்தி! எப்பவும் தேசிய கீதத்தை முணுமுணுத்துக்கிட்டே இருக்காரே!"

"முட்டாள்! கடைசி வரியை கவனி!"

– அ. ராசரத்தினம், கோமாகுடி.

● "உங்க ஆபீஸ்ல எத்தனை பேர் வேலை செய்யறாங்க?"

"பாதிப் பேர்!"

– உமாசங்கர், பிச்சாண்டார் கோயில்.

# MULTIPLE
## FINANCE AND INVESTMENTS

| ஃபிக்சட் டெபாசிட் | | | |
|---|---|---|---|
| குறைந்தபட்ச தொகை | காலம் | வட்டி விகிதம் (ஆண்டிற்கு) | ஊக்கத்தொகை |
| ரூ. 10,000/- | ஓர் ஆண்டு | 24% | 6% |

| க்யூமுலேடிவ் டெபாசிட் | | | |
|---|---|---|---|
| குறைந்தபட்ச தொகை | காலம் | முதிர்வுத் தொகை | பரிசு |
| ரூ. 10,000/- | 33 மாதங்கள் | ரூ. 20,000/- | 1 கிராம் தங்க காசு |
| ரூ. 25,000/- | 60 மாதங்கள் | ரூ.1,00,000/- | 2 கிராம் தங்க காசு |

வட்டியானது பின் தேதியிட்ட காசோலைகளாக வழங்கப்படும்.

முதிர்வுத் தொகை பின் தேதியிட்ட காசோலையாக வழங்கப்படும்.

## MULTIPLE FINANCE AND INVESTMENTS

*H.O. :* F2, இரண்டாவது மாடி, ஸ்வாதி காம்ப்ளக்ஸ், 34, வெங்கட்நாராயணா சாலை, (நந்தனம் டிராபிக் சிக்னல் அருகில்) **சென்னை** - 600 035. ☎ (044) 455130

**கிளை அலுவலகங்கள்**

10, இரண்டாவது மாடி, S.V.V. காம்ப்ளக்ஸ், (சிப்பி தியேட்டர் எதிரில்) No.9, சாஸ்திரி சாலை, தில்லை நகர், **திருச்சி** - 620 017. ☎ (0431) 33076

5/13, ராகவன் தெரு, முதல் மாடி, கௌரி தியேட்டர் எதிரில், சுவர்ணபுரி, **சேலம்** - 636 004. ☎ (0427) 448683

15, மூன்றாவது மாடி, 52 தமிழ் சங்கம் ரோடு, (தமிழ் சங்கம் அருகில்) **மதுரை** - 625 001 ☎ (0452) 38341.

180, வைசால் தெரு, இரண்டாவது மாடி, (அண்ணா சாலை பிரிவு) **பாண்டிச்சேரி** - 605 001. ☎ (0413) 39960.

முதல்வர்

கவர்னர்

பிரதமருக்குத்தான் நேரம் வரமுடியலேன்னா, இங்க இவங்களுக்கு ஏன் நேரம் இருக்கு? கேளுங்க...



1995 ஆகஸ்ட் 20
யுவ ஆவணி 4
மலர் : 54
இதழ் : 3

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## வீம்புக்காக விநாயகர் ஊர்வலம்!

பல முக்கியஸ்தர்களின் கோரிக்கையை ஏற்று, சென்னையில் இவ்வாண்டு மீலாது ஊர்வலத்தை ரத்து செய்திருக்கிறது மீலாது கமிட்டி. சமுதாய ஒற்றுமையையும் அமைதியையும் விரும்பும் ஒவ்வொருவரும் வரவேற்கும் முடிவு இது.

அதே சமயத்தில், 'விநாயக சதுர்த்தி ஊர்வலத்தை நடத்தியே தீருவோம்' என்று ஹிந்து முன்னணித் தலைவர் ராமகோபாலன் கூறியிருப்பது சங்கடத்தை ஏற்படுத்துகிறது. கடந்த பல ஆண்டுகளில், இத்தகைய ஊர்வலங்களின்போது வன்முறைச் சம்பவங்கள் நடந்து, மக்கள் துன்பத்துக்கு உள்ளாகியிருக்கிறார்கள். இதை உணர்ந்து, மேலும் துன்பம் தவிர்க்கவே மீலாது கமிட்டி ஒரு நல்ல முடிவை எடுத்துள்ளது. இதே போன்ற தெளிந்த சிந்தனை ஹிந்து முன்னணித் தலைவர்களிடம் இல்லாமல் போனது வருத்தத்துக்குரியதே.

விநாயக சதுர்த்திக்கு ஊர்வலம் நடத்துவதென்பது தொன்றுதொட்ட நடைமுறை அல்ல. இந்த வழக்கத்தை மஹாராஷ்டிர மாநிலத்தில் அறிமுகப்படுத்தியவர் பால கங்காதர திலகர்தான். இதனை மற்ற மாநிலங்களுக்கும் விஸ்தரிப்பதன் மூலம் மதக் கலவரங்கள் நடக்க வாய்ப்பளிப்பது அவசியமற்றது.




மேலும், இந்த ஊர்வலங்களினால் போக்குவரத்து தடைப்படுகிறது. ஆயிரக்கணக்கான, வர்ணம் பூசிய வினாயகர் பொம்மைகளைக் கடலில் கொண்டு போட்டுக் கரைப்பதால் கடல் நீர் மாசுபடுகிறது.

வினாயகர் சதுர்த்தி ஊர்வலம், சிறுபான்மையினர் வசிக்கும் பகுதி வழியே செல்ல அனுமதிக்கப்பட வேண்டும் என்பதில் ஹிந்து முன்னணித் தலைவர் தீவிரமாக இருக்கிறார். இது ஊர்வலத்தின் நோக்கத்தையே சந்தேகிக்க வைக்கிறது.

ஆட்சிக்கும் போலீஸுக்கும் பெரிய தலைவலியை அளிப்பதைத் தவிர வேறெதையும் இந்த ஊர்வலம் சாதிக்கப் போவதில்லை.

முதல்வர், சுயகெளரவம் பாராமல் ஹிந்து முன்னணித் தலைவர்களை அழைத்து, ஊர்வலத்தை ரத்து செய்யக் கோரலாம். அவர் கேட்டுக் கொண்ட பிறகும் அவர்கள் இசையாவிட்டால், ஊர்வலத்தின் பின்விளைவுகளுக்கு அவர்களே முழு, தார்மீகப் பொறுப்பு ஏற்க வேண்டி வரும்.

## என்ரான் திட்டம் குப்பையிலே!

மஹாராஷ்டிராவின் சிவசேனா - பி.ஜே.பி. அரசு, அதற்கு முந்தைய காங்கிரஸ் அரசு என்ரான் நிறுவனத்துடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தைக் கிழித்து, குப்பையில் போட்டுவிட்டது!

காங்கிரஸ் ஆட்சியில் என்ரானிடமிருந்து கையூட்டுப் பெறப்பட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டுள்ளது. ஆனால், இதற்கு ஆதாரங்கள் காட்ட முடியவில்லை. செலவான தொகை முழுவதற்கும் ஆவண ஆதாரங்களை வைத்திருப்பதாக என்ரான் சொல்கிறது.




உணர்ச்சி அடிப்படையில் எடுக்கப்பட்ட முடிவின் விளைவுகளைச் சந்திக்கப் போவது பொதுமக்கள்தான். என்ரான் நிறுவனம் எடுக்கும் சட்ட பூர்வமான நடவடிக்கைகளை எதிர்கொள்ள வேண்டிவரும். வழக்கு மிக நீண்ட காலத்துக்கு இழுக்கடிக்கும் என்பதால் செலவும் எக்கச்சக்கமாக இருக்கும். வழக்கில் தோற்றால் செலுத்த வேண்டிய நஷ்டஈட்டுத் தொகையோ கற்பனை கூட செய்து பார்க்க முடியாத அளவுக்கு பிரும்மாண்டமானது!

காங்கிரஸ் அரசு, என்ரானுக்குத் தேவையற்ற, ஏராள சலுகைகள் கொடுத்து விட்டதாக இன்றைய மஹாராஷ்டிர அரசு கருதுகிறது எனில், 'ஒப்பந்தத்தை மறுபரிசீலனை செய்து வடிவமைக்கலாம்' என என்ரான் முன்வந்தபோது அதனை ஏற்றுக் கொண்டிருக்கலாம். அப்படி ஏற்காமல் நிராகரித்துவிட்டதானது, வெறும் அரசியல் நோக்கில்தான் என்ரான் குறித்த முடிவு எடுக்கப்பட்டுள்ளது என்பதை அடிக்கோடிட்டுக் காட்டுகிறது.

ஒப்பந்தம் செய்து கொண்ட காங்கிரஸ் அரசும், இப்படியொரு மெகா திட்டத்தை மேற்கொள்ளும் முன் சுற்றுச் சூழல் வல்லுனர்களையும் எதிர்க்கட்சி உறுப்பினர் களையும் கலந்தாலோசித்திருக்கலாம்.

ஆனால், அத்தகைய விருப்பு வெறுப்பற்ற பரந்த நோக்கை இன்று எந்த அரசியல் கட்சியிடமும் காண முடிவதில்லை.

விளைவு...? அயல்நாட்டு நிறுவனங்கள் நம்மோடு தொழில், வர்த்தக ஒப்பந்தங்கள் செய்து கொள்ளவே இனி தயங்கும். இதன் காரணமாக பொருளாதார வளர்ச்சியில் பின்னடைவு ஏற்படும். உலக அரங்கில் இந்தியாவுக்குப் பெரிய தலைகுனிவு!

# “மர்மம் ஏதுமில்லை!”

**க**ல்கி 30-7-95 இதழில் 'நச்சுத் தன்மையைப் பரப்பப் போகும் நைலான் தொழிற்சாலை' என்ற தலைப்பில் கும்மிடிப் பூண்டியில் அமையவிருக்கும் தாபர்-டூபாண்ட்டின் நைலான் தொழிற்சாலை பற்றிய கட்டுரை ஒன்று வெளியிட்டிருந்தோம் அல்லவா! அந்தக் கட்டுரையில், கோவாவிலிருந்து கும்மிடிப்பூண்டிக்குத் தொழிற்சாலையைக் கொண்டு வந்த மர்மத்திற்கு மாத்திரம் விடை இல்லை என்று எழுதியிருந்தோம். அதில் ஒன்றும் மர்மம் இல்லை என்று விளக்குகிறார், தாபர்-டூபாண்ட்டின் மனித வளத்துறை இயக்குனர் எஸ்.தீனதயாளன்.

“**கோ**வாவில் இருந்து கும்மிடிப் பூண்டி வந்ததில் எந்த மர்மமும் இல்லை. எந்த ஒரு வளர்ச்சிப் பணிக்கும் முட்டுக் கட்டை போடும் மோசமான போக்கு அங்கு நிலவுகிறது. ஒரு பேருந்து நிலையம் அல்லது சாலை கூட அமைக்க முடியாத சூழ்நிலை அங்கு இருக்கிறது. வேறு சில சுயநலக் காரணங்களை முன்னிட்டு, சுற்றுப்புறச் சூழல் மாசுபட்டு விடும், கோவாவின் அழகு கெட்டுவிடும் என்ற கோஷங்களை முன்னிறுத்தி சிலர் போராடுகிறார்கள்.

“இன்னமும் கேட்டால், சுற்றுப்புறச் சூழலுக்கு மிகத் தீங்கிழைக்கும் சுரங்கத் தொழில் படு ஜரூராக அங்கு நடக்கிறது. இதை எதிர்த்து யாரும் போராடவில்லை. காரணம் இதை நடத்துபவர்கள் அந்த ஊர்க் காரர்களே.

“இந்நிலைகள் காரணமாக மிகப்பிரபலமான மருந்து நிறுவனம் சிபா-கீஜ் வெளியேறப் போவதாக எச்சரித்திருக்கிறது. டாட்டாவின் எக்கு தொழிற்சாலை கோவாவை விட்டு கார்வார் செல்ல வேண்டியதாயிற்று. கொங்கன் ரயில்வேயும் எதிர்ப்பைச் சந்தித்தது. ஆக, தினசரி போராட்டம், வன்முறை என்ற சூழலில், தாபர்-டூபாண்ட் செயல்பட விரும்பவில்லை. எனவே தான் வேறு இடங்களைப் பார்த்தோம். நாங்கள் பார்த்த பதினான்கு இடங்களிலும் எங்களுக்கு நல்ல வரவேற்பு இருந்தது. ஆனால் எங்களுக்கு எல்லா விதத்திலும் கும்மிடிப்பூண்டி வசதியாக இருப்பதால் அங்கு செயல்பட இருக்கிறோம்.

“தமிழக மின்சார வாரியம் எங்கள் தேவைக்கு ஏற்ப மின்சாரம் கொடுக்க முடியாததால் நாங்கள் Captive Power Plant வைக்கப் போகிறோம். இது போல வைப்பவர்களுக்குக் கொடுக்கப்படும் சலுகை விலையில் தான் எங்களுக்கும் மின்சாரம் வழங்கப்பட இருக்கிறது. மேலும், கும்மிடிப் பூண்டிக்கென்று சிப்காட் செய்துள்ள தண்ணீர் வசதியைத்தான் நாங்கள் பயன்படுத்திக் கொள்ளப் போகிறோம்.

“நைலான் தயாரிப்பில் முக்கிய மூலப் பொருட்களான அசிடிக் அமிலமும், ஹெக்ஸா மெத்திலின் டையமின்னும், அமெரிக்க அரசாங்கத்தால் பொதுமக்கள் உபயோகிக்கும் பாதுகாப்பான பொருள்களின் வரிசையில் இடம் பெற்றுள்ளன. அமையவிருக்கும் தொழிற்சாலை பற்றி மக்களிடம் விளக்கிச் சொல்லும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறோம்.. டாட்டா கன்ஸல்டன்சியை அமர்த்தி ஆய்வு நடத்தச் சொல்லியிருக்கிறோம். தாபர் - டூபாண்ட் திறந்த மனத்துடன் பகிரங்கமாகச் செயல்பட விரும்புகிறது. இது டூபாண்ட்டின் பாரம்பரியங்களில் ஒன்று.

“ஆனால் துரதிருஷ்டவசமாக, எங்கள் பகிரங்கத் தன்மை தவறாகப் புரிந்து கொள்ளப்படுகிறது. 'எவ்வளவோ தொழிற்சாலைகள் நிறுவப்படுகின்றன. யாரும் மக்களிடம் இது போன்று விளக்குவதில்லையே' என்று சந்தேகங்கள் கற்பிக்கப்படுகின்றன. ஆனால் மக்களை உண்மைகளின் மூலம் திருப்தியடையச் செய்ய முடியும் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது.

“மேலும் தமிழக அரசு எந்த விதமான தனிப்பட்ட சலுகைகளையும் எங்களுக்குக் கொடுக்கவில்லை. சில அரசியல்வாதிகள், தம் சுயலாபங்களுக்காக ஏதாவது சொல்லிக் கொண்டிருக்கலாம். ஆனால், உலகெங்கிலும் செயல்படும் தாபர் - டூபாண்ட்டின் 12 நைலான் தொழிலகங்களைச் சுற்றி வசிக்கும் மக்களைக் கேட்டால் 'சுற்றுப்புறச் சூழலுக்கு டூபாண்ட் கொடுக்கும் முக்கியத்துவம் தெரியவரும்'' என்கிறார் தீனதயாளன்.

- ப்ரியன்.



• எஸ்.தீனதயாளன்.

# எமனை உதைக்கலாம் வாருங்கள்!

## ஒரு தலம்; ஒரு பாடல்; ஒரு நயம்!

'**வா**ரன்ட்' இல்லாமல் காவலர், யாரையும் கைது செய்யக் கூடாது. வாரன்ட் இருந்தாலும் முன் ஜாமீன் பெற்ற ஒருவனைக் கைது செய்ய முடியாது. மீறி கைது செய்ய முயன்றால் காவலர் கதை கந்தலாகிவிடும்!

மார்க்கண்டேயர் என்ற இளம் ரிஷிக்கு பதினாறு வயதில் மரணம் வந்தாக வேண்டும். அந்த வாரன்டை எடுத்துக் கொண்டு எமதர்மன் வந்து அட்டகாச மாகப் பாசக் கயிறு வீசினான். ஆனால் அவரோ, சிவபெருமானிடம் முன் ஜாமீன் பெற்றிருந்தார். அதை மதிக்காமல் விரட்டிய எமன், சிவ பெருமானின் இடது காலால் உதைபட்ட இடம் திருக்கடவூர். அதனால் இங்குள்ள சுவாமிக் குக் காலசம்ஹார மூர்த்தி என்று பெயர். இந்தத் தலம் அட்ட வீரட்டானம் எனப்படும் எட்டு வீர விளையாடல்கள் நிகழ்ந்த இடங்களில் ஒன்று.

பூவைக் காயாக்கி, காயைக் கனியாக்கி, அதை வீழ்த்தி முடிக்கிறது காலம். காலம் என்பது பெரும் தத்துவம். கால நியதியின்படி என்ன நடக்க வேண் டுமோ அதை நடத்துபவன் காலன். ஆனால் கால தத்துவத்தை வென்றவர்கள் யோகிகள். அது எப்படி?

காலம் மூன்றாகப் பிரிந்து - இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என நின்று உலகை ஆட்டிப்படைக்கிறது. ஆனால் மூன்றையும் ஒன்றாக்கி அடக்கித் தன் கையில் வைத்திருப்பவன் ஈசுவரன். அதனால் அவன் காலகாலன். மேலும் உலகத்தில் கோள்களின் சுழற்சியால்தான் காலம் கணக்கிடப்படுகிறது. சுழற்சி நின்றுவிட்டால் காலம் என்பதே இல்லை. அந்தச் சுழற்சியை நடத்தி, தன் கையில் சக்கரத்தை ஏந்துகிறான் திருமால். காலம் அவன் கட்டுக்குள் இருக்கிறது



**சுகிசிவம்**




# ஸ்ரீராம் பதில்கள்

உண்மைதான். இன்னிக்கு சேமிக்கணும்னா பல கம்பெனி இருக்கு. எதில பணம்போடறது, எதில போடக்கூடாதுங்கறதுதான் ஒரே குழப்பம். அதில சிறந்ததும் சரியானதும் எதுன்னு இப்போ பாக்கலாம்.

**வங்கிகள்:** இவற்றில் டெபாசிட் செஞ்சா 12% வட்டிதான் கிடைக்கும். அதிக லாபம் வேணும்னா மற்ற நிறுவனங்களத்தான் தேர்ந்தெடுக்கணும்.

**பெனிஃபிட் ஃபண்டுகள் :** இவை எப்படி தெரியுமா? பெரும்பாலும் நிலத்தின் பேர்ல கடன் கொடுக்கிறதுக்கு உங்களோட டெபாசிட்டுகளை பயன்படுத்துறதாக சொல்றாங்க. ஆனா, கடன் வாங்கினவங்க தொகையை திருப்பித்தர தவறினா, அந்த சொத்துக்களை கையகப்படுத்தி, விற்று அதுக்கப்புறந்தான் உங்க பணத்தை மீட்கணும். உங்களுக்குத் தேவைப்படும்போது உங்கள் பணத்தை திருப்பிக் கொடுப்பதற்கு கஷ்டப்படுவாங்கனு தோணுது.

**உற்பத்தி நிறுவனங்கள்:** இவை லாபகரமா இயங்கினாதான் உங்களுக்கு வட்டி. விற்பனையில் தேக்கமோ, வசூலில் தடங்கலோ, இல்ல வேலை நிறுத்தமோ ஏற்பட்டா



சேமிக்கணும்னு சொல்றீங்க, சரி. ஆனா எதிலேன்னு சொல்லலியே?

– ப. ஆனந்தி, ஆதம்பாக்கம்



உங்க டெபாசிட்டுகளை திரும்பப் பெறுவது ரொம்ப கஷ்டங்க. உதாரணமா, ஆந்திரா சிமெண்ட்ஸ், ஸ்டான்டர்ட் மோட்டார் புராடக்ட்ஸ் ஆப் இந்தியா போன்ற உற்பத்தி நிறுவனங்கள் டெபாசிட் -தாரர்களின் பணத்தை திருப்பித் தரவே இல்லீங்க.

**நிதி நிறுவனங்கள்:** நிதி நிறுவனங்களுக்கு இந்த பிரச்சினைகள் இல்லை. ஆனால், நிதிநிறுவனங்களுடைய நிதியை எந்த தொழிலில் ஈடுபடுத்துகிறார்கள் என்பதை பொறுத்துதான் உங்கள் டெபாசிட்டுக்கு பாதுகாப்பும், வட்டியும் கிடைக்கிறது. கூடுதலான வட்டி கிடைக்கிறது என்று டெபாசிட் செய்துவிட்டு அசலை தொலைத்தவர்கள் பலரை உங்களுக்கே தெரிந்திருக்கும். எந்த நிதி நிறுவனத்தில டெபாசிட் செய்யலாம்ங்கிற முடிவை விளம்பரங்களை பார்த்து மட்டும் எடுத்தால், பண நஷ்டம்தான் ஏற்படும் என்று உறுதியாக சொல்ல முடியும்.

(இரண்டாம் பகுதி ..40.. ம் பக்கத்தில்)

HaraVision SGC 14375 TAM

என்பதே அதன் பொருள். இவையாவும் கால தத்துவத்தை வென்றது கடவுள் தத்துவம் என்பதை விளக்கும்.

நியமனப்படி வரும் காலனை இறைவர் இடதுகாலால் உதைத்தார் என்பது புராணம். தமிழில் கால் என்றால் உடம்பைத் தாங்கும் பாதம் மட்டும் அல்ல; காற்றையும் குறிக்கும்! காற்றுவரும் ஜன்னலுக்குப் பழைய தமிழ்ப் பெயர் 'கால் அதர்'. எனவே இடது கால் என்றால் இடது நாசியில் ஓடும் காற்று என்பதே உண்மைப் பொருள். நாம் சுவாசிக்கும் போது இடது நாசியில் சிறிது நேரமும் - வலது நாசியில் சில நேரமும் - இரண்டிலும் சேர்த்து சில நேரமும் - இப்படி மாறி மாறி சுவாசிப்பது வழக்கம். இந்த சுவாசமே நமது எண்ணங்களை, வாழ்வை உருவாக்குவது. மனம், புத்தி, சித்தம் என்பவை நம் வாழ்வின் போக்கை முடிவு செய்யும் அந்தக்கரணங்கள். அவை எவ்வப்போது தொழிற்படுகின்றன என்று யோகிகள் கண்டறிந்தனர்.

இடது நாசியில் சுவாசிக்கும் போது மனமும் - வலது நாசியில் சுவாசிக்கும் போது புத்தியும் தொழிற்படுகிறது. மனமும் புத்தியும் சமனமாகும் போது - இரு நாசியிலும் சமமாகக் காற்று ஓடும் போது - அல்லது நிற்கும் போது சித்தம் செயல்படுகிறது. அப்போது புருவ மத்தியில் உள்ள ஆக்ஞா என்ற சக்கரம் சுழல்கிறது. சித்தம் சிவமாகிறது. செய்தனவே தவமாகிறது. இந்நிலை அடைந்தோர் சித்தர்கள். மரணம் அவர்கட்கு வெகு தொலைவில் நின்று விடுகிறது.

எனவே இடது கால் என்றால் இடது சுவாசம். அதன் வழி இயங்கும் மனத்தை அடக்கி, இறைவர் பால் வைத்தால் மார்க்கண்டேயன் சிவலிங்கத்தைத் தழுவியது போல, தான் ஜீவன் அல்ல - சிவன் என்று தழுவினால் உடம்பும் உயிரும் கூறுபோட முடியாதபடி கூற்று உதைபடுகிறது. ஜீவன் முக்தி தேகத்துடனேயே சித்திக்கிறது!

இந்தக் கதை நிகழ்ந்த இடம் திருக்கடவூர். நிகழ்த்தியவர் மார்க்கண்டேய மகரிஷி. மரணத்தை வென்றதால் அவர் "மாயா (சாகாத) முனிவர்" எனப்பட்டார் அபிராமி அந்தாதியில்.

மார்க்கண்டேயர் மட்டுமல்ல; குங்கிலியக் கலய நாயனார் அவதரித்த பூமியும் திருக்கடவூர்தான்! அங்குள்ள இறைவருக்கு அமிர்த கட ஈஸ்வரர் என்பது திருநாமம். பாற்கடலைக் கடைந்து எடுத்த அமிர்த கடம் (குடம்) இறுகி இங்கு சிவலிங்கம் ஆனது என்பது தலவரலாறு. கடம் தமிழில் கலயம் எனப்படும். எனவே அமிர்த கட ஈஸ்வரர் என்பதன்



## அருள்வாக்கு

**ம**னுஷ்யன் புறத்தில் ஆனந்தத்தைத் தேடிக் கொண்டு போவதற்குக் காரணம், அவன் உள்ளுக்குள் தானே ஆனந்த ஸ்வரூபமாக இருப்பதுதான். இவன் உள்ளூற ஆனந்த ஸ்வரூபமாய் இருப்பதாலேயே ஆனந்தத்தை எப்போது பார்த்தாலும் தேடிக் கொண்டிருக்கிறான். மாயையால், தானே ஆனந்த ஸ்வரூபம் என்பதை மறந்து விட்டிருக்கிறான். இருந்தாலும் இவனுடைய ஸ்வபாவமே ஆனந்தமான படியால் இவனுக்கு ஆனந்தம் அடைய வேண்டும் என்ற எண்ணம் மட்டும் இருக்கிறது. மனுஷ்யர்களில் எவராவது ஆனந்தத்தைத் தேடாமல் துக்கத்தைத் தேடிப் போகிறவர் உண்டா? ஆனாலும் அந்த ஆனந்தம் உள்ளே இருப்பதை அறிந்து சாந்தத்தில் அதை அநுபவிக்காமல், வெளியிலே ஆனந்தத்தைத் தேடித் தூர்த்திக் கொண்டே போய்ச் சாந்தியை ஓயாமல் கெடுத்துக் கொள்கிறார்கள். தன் நிஜ ஸ்வரூபம் என்ன என்று ஒருவன் அம்பாளின் கிருபையால் பிரார்த்தித்து ஆத்ம விசாரம், தியானம் செய்து பார்த்தால், தானே பூரண ஆனந்தவஸ்து என்று தெரிந்து கொள்வான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.



## சிந்தனை

**க**டுமையான நெறியைத் தளராது பின்பற்றும் ஓர் ஆற்றலே சுதந்தரத்தின் அடிப்படையாகும். ஒரு தெய்வத்தின் முதிர்ந்த சுதந்தரத்தை ஓர் ஆன்மா எய்துவதற்கு முன், ஐம்புலன்களை அடக்குகிற அறத்தை நிறைவேற்றுதற் பொருட்டு ஒழுக்க விதிகளின் வெம்மையைப் பொறுத்தே தீர வேண்டும். சுதந்தரத்தோடே தொடங்குகின்ற விதிகள், இயற்கையாகவே தளையற்ற மாபெரும் சான்றோர்களுக்கே அமையும். அல்லது முற்பிறப்பில் சுதந்தரத்தை நிலை நாட்டியவர்களுக்கும் இது ஒவ்வும்.

— அரவிந்தர்

அழகிய தமிழாக்கம் கலய நாயனார். இறைவனுக்கு அவர் குங்கிலியத் திருப்பணி செய்து குங்கிலியக் கலய நாயனார் எனப்பட்டார். அது மட்டுமா? உய்ய வந்த தேவர் என்ற மகான் அவதரித்ததும் இங்குதான்!

**சோ**ழ நாட்டின் தஞ்சை மாவட்டத்தில், காவிரி ஆற்றின் தென்கரையில் மாயூரம் - தரங்கம்பாடி இருப்புப் பாதையில் உள்ளது திருக்கடவூர். ஞானம் என்பது என்ன என்று பிரமன் சிவனை வேண்ட, மோனம் என்பது ஞான வரம்பு என்றுணர்த்தினார் இறைவர். அந்த மோனத்தில் முளைத்த வில்வமே, இத்தல விருட்சமானதால் வில்வாரண்யம் என்றும் இத்தலத்துக்குப் பெயருண்டு. சிலர் அம்பிகையின் கொழுங்கடைக்கண் பார்வை கிடைக்கும் ஊர் என்பதாலே திருக்கடையூர் என்பர். 'அபிராமி கடைக்கண்களே' என்பது அபிராமி அந்தாதி பாடல் அல்லவா!

இங்குள்ள அபிராமி, அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி. சின்னம் சிறிய இடையில் சிவந்த பட்டுடுத்தி, பென்னம் பெரிய திருமார்பும், முத்துமாலையும் பிச்சிப்பூ மொய்த்த கன்னங்கரிய குழலும், கண் மூன்றும், கரும்பு வில்லும், பாசாங்குசமும் கையிலேந்திய அருள் வடிவினள். மூவரும் தேவரும் தொழுகிற மூலப்பரம்பொருள். சாத்தர்கள் கொண்டாடும் பராசக்தி. கையில் கரும்புவில்லுடன் உள்ள அம்பிகை சொரூபங்கள் மிக உயர்ந்த சக்தி நிலையங்கள்.

மனிதரையும் தேவரையும் மட்டும் அல்லாது, மகா தேவனான சிவ பெருமானையும் வாழ்வித்தவள் இவள் என்பது அபிராமி பட்டர் அபிப்பிராயம்.

அபிராமி அந்தாதி ஓர் அற்புத இலக்கியம். தேவர்கள் அமுது பெற்ற தலத்தில் மனிதர்கட்காக அம்பிகை வழங்கிய அருந்தமிழ் அமிர்தம் அபிராமி அந்தாதி. அந்தாதியில் ஒரு பாடல் வரி -

"வார்சடையோன் அருந்திய நஞ்சு அமுது ஆக்கிய அம்பிகை" என்று வருகிறது.

தேவரும் அசுரரும் சேர்ந்து பாற்கடலைக் கடைந்ததும் அமிர்தம் வரவில்லை! விஷம் வந்தது! பஸ்ஸுக்குக் காத்திருக்கும் போதே நமக்கு வேண்டிய பஸ் வராது. வேண்டாத பஸ் முதலில் வருமே... அது போல! வந்த விஷத்தை என்ன செய்ய?.. 'ஆகாத சமாசாரமா? அடுத்தவனுக்குக் கொடு' என்ற ரீதியில் - தேவர் அசுரரை வேண்ட, அசுரர் தேவருக்குத் தர, ஒரே குளறுபடி!

கடைசியில் சிவ பெருமானிடம் தந்தனர். செல்லாத ரூபாயைக் கண்டக்டரிடம் கொடுத்துப் பார்ப்போம். அவரும் மறுத்துவிட்டால் இருக்கவே இருக்கிறது கோயில் உண்டியல்

என்ற மாதிரி!

விஷம் சிவனிடம் வந்தது.

விஷத்தை எடுத்து சிவபெருமான் வாயில் இட்டதும் பார்வதி தேவி பதறினாள். பெருமான் கண்டத்தைப் பற்றி நெறிக்க, விஷம் நின்றது என்பார்கள்.

அம்பாள் விஷத்தைக் கண்டத்தில் நிறுத்தினாள் என்கிற கதையை ஒருபுரட்டு புரட்டி விட்டார் அபிராமி பட்டர்!

எப்படி?

பாற்கடலைக் கடைந்த போது விஷம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அதைக் கொணர்ந்த போதும் அது விஷம். சிவ பெருமான் கையில் எடுத்த போதும் அது விஷம். விழுங்கிய போதும் விஷம். பார்வதி, என் அன்னை... ஓடி வந்து கைகளால் கண்டத்தைத் தொட்டதும் அது விஷமா? இல்லை. அது விஷமில்லை. நேர்மாறான அமிர்தமே ஆகிவிட்டது!

அம்பாள் கைபட்ட பிறகும் அது விஷமாகவே இருந்தால் அவள் கைராசி என்னாவது?

இன்னொரு விஞ்ஞான உண்மையும் இங்கு இருக்கிறது! விஷமும் அமிர்தமும் வெவ்வேறு அல்ல. ஒன்று மற்றொன்றாகச் சக்தியால் மாற்றமடைகிறது. டாக்டர் எழுதிக் கொடுக்கின்ற மருந்துச் சீட்டில் உள்ள பெருவாரியான விஷயங்கள் விஷங்கள். மருந்துக் கடையில் கொட்டை எழுத்தில் POISON என்றே போட்டிருக்கும். நோயாளியின் நோயும் மருத்துவர் முடிவு செய்யும் அளவும் (Dose) அதை அமுதாக்குகிறது. மருந்தையே சீக்கிரம் நோய் குணமாக வேண்டும் என்று ஏராளமாய் விழுங்கினால் மருந்தே விஷமாகிறது! மருந்து விஷமாவதும் விஷம் மருந்தாவதும் சக்தி மாற்றமே!

மூன்று மூன்றாகக் கருதப்படும் சகல விஷயங்களின் தலைவி, செம்புக் கலசப் போன்ற திருமார்பால் வருந்துகிற இடையுடையவள். மனோன்மணி, சிவபெருமான் அருந்திய விஷத்தை அமிர்தமாக்கிய அம்பிகை - தாமரையில் குடியிருக்கும் அழகி, திருவடி என் சென்னியில் என்ற பொருளில் உள்ள அபிராமி அந்தாதிப் பாடல் இதோ :

பொருந்திய முப்புரை செப்புரை
செய்யும் புணர்முலையால்
வருந்திய வஞ்சி மருங்குல்
மனோன்மணி வார்சடையோன்
அருந்திய நஞ்(சு) அமு தாக்கிய
அம்பிகை அம்புயமேல்
திருந்திய சுந்தரி அந்தரி
பாதம் என் சென்னியதே!

(தொடரும்)


## JOIN IN OUR GOLD HUNT SCHEME

Scheme : **18 Months**
Amount : **Rs.250/-**
(to be paid every month)
Members Limited to **150**
Lucky Draw on Every **15th**

தங்க வேட்டை திட்டத்தில் சேர்ந்து பயன்பெற உங்களை அழைக்கிறோம்.

திட்ட காலங்கள் 18 மாதம்
பிரிதி மாதம் செலுத்த வேண்டியது ரூ. 250/-
திட்ட முதிர்வில் கிடைப்பது ரூ.5000/ +5gm வெள்ளிக்காசு

விவரங்களுக்கு
சின்முத்ரா ஃபைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மேண்ட்ஸ்
112, முதல் மாடி, இராமகிருஷ்ண மடம் சாலை,
(இராணி மெய்யம்மை உயர்நிலைப் பள்ளி எதிரில்)
மந்தைவெளி, சென்னை - 600 028.

எங்கள் சேமிப்பு திட்டத்தில் சேர்ந்து தங்கள் தேவையை பூர்த்தி செய்து கொள்ளும் எளிமையான திட்டங்கள்
காலம் 20 மாதம்
மாதம் ரூ.500/-
சேர்ந்து 2 மாதம் ஆனவுடன் ரூ.5000 வரை கடன் பெறும் வசதி.

கடனுக்கு வட்டி ஏதும் இல்லை.

# நிழல் முகம்

விஞ்ஞானி பரதனைப் பார்க்கப் போவதாகச் சொன்னதும் என் காதலி தேன்மொழி துள்ளிக் குதித்தாள்.

"ஏய், நீ நிஜமாவா சொல்றே?"

"உன் ஆயா மேல சத்தியமா!"

"ஓ... அவர் எவ்வளோ பெரிய ஆள் தெரியுமா?"

"தெரியுமே! சுமார் அஞ்சரை அடி உயரம்."

"நீ உதை படப்போறே. கமான், எப்போ?"

"இப்போ. இந்த நிமிஷம்! வரியா நீ?"

"நீ கூப்பிடாட்டாலும் வருவேன்... நாலு வருஷத்துக்கு முன்னால் எங்கப்பாவுக்கு அடியோட பார்வை போயிடற நிலைமை வந்தது. அப்போதான் விஞ்ஞானி பரதனோட கண்டு பிடிப்பு பிரபலமாய்ப் பேசப்பட்ட நேரம். கொஞ்சம் ரிஸ்க் எடுக்கலாம்னு அவரோட ரிஸர்ச் நடந்துகிட்டிருக்கிற ஆஸ்பத்திரிக்குப் போய் அந்த சிகிச்சைக்கு ஒத்துக்கிட்டாரு. இப்போ... அப்பாவுக்கு அருமையா கண் தெரியுது. நாங்க எல்லோரும் படிச்சுகிட்டிருக்கிற காலத்தில் அவர் மட்டும் பார்வையில்லாமல் வீட்டில் உட்கார்ந்திருந்தா என் அண்ணன் இஞ்சினியராயிருக்க முடியாது. என் ரெண்டு அக்காவுக்குக் கல்யாணம் ஆகியிருக்காது. அந்த ஏக்கத்தில் அம்மாவுக்கு உயிரே போயிருக்கும்... ஆக ஒரு குடும்பத்துக்கே விளக்கு ஏத்தி வெச்சிருக் ."

"செண்டிமெண்டாய்த் தொட்டுட்டே போ... நீ வரே" என்றேன் பரிசாக ஒரு குறைந்த பட்ச 'இச்'சை எதிர்பார்த்து. ஊஹூம்.

இவள் குடும்பம்தான் என்றில்லை. கண் சிகிச்சையில் அவர் ஒரு பெரிய புரட்சியே பண்ணியிருக்கிறார். ஏதேதோ மூலிகைகளை வைத்து அவரது தோட்டத்திலேயே வளரும் பச்சிலைகளைக் கொண்டு ஒரு மருந்து கண்டு பிடித்தார். வருஷக்கணக்காக ஆராய்ச்சி செய்து ராப்பகலாய்க் கண் விழித்துச் செய்திருப்பார் போலும். அந்த மருந்துக்கு ஒரு அபூர்வ சக்தி இருக்கிறது. எந்தவிதமான கண் நோயையும் கத்திபடாமல் சரி பண்ணிவிடுகிறது. இப்போது அவருக்கு உலகின் பல மூலைகளிலிருந்தும் அவார்டுகள் வந்து குவிந்து விட்டன. அவரது சிகிச்சை நூறு சதவீதம் வேலை செய்வதாய் எல்லோரும் ஒப்புக் கொண்டாகி விட்டது. கண் ஆயின்ட்மெண்ட் கம்பெனிகளை இழுத்து மூடப் போவதாய்க் கேள்வி!

"எங்க பேங்க் ரெக்ரியேஷன் கிளப்பில் இவருக்கு இந்த வருஷத்தோட சிறந்த மனிதர்னு பட்டம் குடுத்து ஹானர் பண்ணினாங்க. நேத்திக்கு ஃபங்க்ஷனுக்கு அவர் வரலை. அதனால அந்தப் பட்டம், மொமெண்டோ எல்லாத்தையும் என்னைப் போய்க் குடுத்துட்டு வரச் சொன்னாங்க. அதுக்காகப் போறேன். கம், வி வில் கோ." என்று கையை நீட்டினேன்.

"ஆசையைப் பாரு. எல்லாம் எனக்கே நடக்கத் தெரியும். ஆமாம், ஏன் உங்க கிளப்புக்கு அவர் நேத்தி வரலை?"

"தெரியலை... கண் வலி போல இருக்கு.."

"ஷ்... கேலி வேண்டாம். அவர் எத்தனை பெரிய ஜீனியஸ் தெரியுமா? அருமை தெரியாம அவரைப் பத்தி ஜோக்கடிக்காதே."

என் மோட்டார் பைக்கை அந்த இரும்பு கேட்டுக்கு முன்னால் ஸ்டாண்டு போட்டு நிறுத்திய போது செமை ஆர்வம் உணர்ந்தேன். இவள் உருகுமளவுக்கு நான் வெளிப்படையாய் உருகவில்லையே தவிர, இதைப் போல் பக்தி என் மனசிலும் உண்டு. எத்தனை பெரிய ஜீனியஸைச் சந்திக்கப் போகிறோம்! உலகத்தின் அத்தனை விஞ்ஞானப் பத்திரிகைகளிலும் சாதா பத்திரிகைகளிலும் அவருடைய மழுமழு முகம் அட்டையில் அச்சாகிவிட்டது. டெலிவிஷன் பேட்டியில் பார்த்திருக்கிறேன். எத்தனையோ கஷ்டப்பட்டு சமுதாயத்துக்காக இத்தனை பெரிய நன்மை செய்திருப்பதாய்ச் சொன்ன போது குரலில் இருந்த கர்வத்தில் மிகுந்த நியாயம் இருப்பதாய்த் தோன்றியது.

"சும்மா ஒரு அஞ்சு நிமிஷம் பார்க்கப் போற நமக்கே இப்பிடி இருக்கே.. அவரோடயே வாழ்ந்துகிட்டிருக்கிற அவரோட குடும்பத்தினருக்கு எப்பிடி இருக்கும்!"



தேன் மொழியின் தேன் வழிந்த குரலில் வியப்பும் வழிந்தது.

உண்மைதான். கொடுத்து வைத்த மனைவி என்று தோன்றியது. சட்டென்று சின்னதாய் ஒரு ஐடியா தோன்றியது. இந்த அவார்டைக் கொடுத்துவிட்டு, அவருடைய மனைவியிடம் பேச்சுக் கொடுக்கலாம். அந்த அம்மாள் கணவரைப் பற்றிப் பெருமை பொங்கப் பேசுவதையெல்லாம் டீவியில் பார்த்தாகி விட்டது. பொதுவான விஷயங்களாகப் பேசி, அவருடைய தினசரி வாழ்க்கையில் என்னென்ன செய்வார் என்று நாலு கேள்விகள் கேட்டு வைத்துக் கொண்டால் நாளைக்கு எதாவது நல்ல பத்திரிகைக்குக் கொடுத்துத்தான் பார்க்கலாமே?

கேட்டைத் திறந்து கொண்டு போனபோது லேசாய் வியப்பு. இத்தனை சாதாரண வீட்டிலா இருக்கிறார் விஞ்ஞானி! என்ன ஒரு எளிமை! கூர்க்கா, நாய் என்று எந்த பந்தாவுமே இல்லாத வியப்பில் நாங்கள் உள்ளே நுழைய,

"**யா**ரு வேணும்? அவர் இல்லைங்களே..." உள்ளேயிருந்து மெலிந்த தேகத்துடன் சிவந்த நிறமுடைய அந்த அதிருஷ்டக்கார மனைவி வெளியே வந்தார். டீவியில் இந்தச் சிவப்பு தெரியவில்லை.

"வந்து... நான்..."

என் ஷாப்பின் பெயரைச் சொல்லி அறிமுகம் பண்ணிக் கொண்டேன். வந்த வேலையைச் சுருக்கமாகச் சொன்னேன்.

'ஆஹா... விருதா?' என்று அக மகிழ்ந்து போகவில்லையென்றாலும் சந்தோஷமாய் இரண்டு வார்த்தை சொல்லிவிட்டு வாங்கிக் கொள்வார் என்று நினைத்தேன். படுபடு அஸ்வாரஸ்யத்துடன் கையை நீட்டினார்.

"குடுத்துட்டுப் போங்க. சயன்டிஸ்ட் வந்தாக் குடுத்துடறேன்."

என்ன இந்தப் பெண் இப்படிச் சொல்கிறாரே என்று நான் முதலில் இருந்தது. உலக அளவில் நிறைய அவார்டு வாங்கியவர். அதனால் இந்த மாதிரி சாதாரண விருதெல்லாம் அவர்களுக்கு அலட்சியமாகி விட்டது போலும்.

நாங்கள் ஷாப்பில் மண்டையை உடைத்துக் கொண்டு பார்த்துப் பார்த்து ஆர்டர் கொடுத்துச் செய்த இரண்டாயிரம் ரூபாய்க்கும் மேல் மதிப்புள்ள அந்த மொமென்ட்டோ மிக அநாதையாய் மேஜை மேல் இருந்தது. ஹூம். கணவரின் அருமை தெரியவில்லை இந்த அம்மாளுக்கு. தோட்டத்துப் பச்சிலை என்பார்களே....

"அவர் ஏன் நேத்திக்கு வரலை? கார்கூட அனுப்பினோமே... ஒரு வேளை... உடம்பு கிடம்பு சரியில்லையா?"

"இல்லை... அவருக்கு அதைவிட முக்கியமான வேலை நிறைய இருக்கு...."

எனக்கு அந்த பதிலில் சே என்றானது. என்ன ஒரு அலட்சியமான வார்த்தைகள்!

"காப்பி சாப்பிடுங்க..."

பக்கத்தில் இருந்த என் ஆளைப் பார்த்தேன். கண்ணாலேயே சம்மதம். "இருக்கட்டுங்க.. எதுக்குக் காப்பியெல்லாம்...." என்று அவன் உபசாரமாய்ச் சொன்னான்.

"குட்டீ... காப்பி கொண்டா...." உள்ளே பார்த்து உழக்குக்குக் குரல் கொடுத்தாள்.

"வந்து.. உங்க கணவரைப் பத்தி நினைக்கும் போதே உங்களுக்கு ரொம்பவும் பெருமையா இருக்கும் இல்லை? இப்பிடி உலகமே

வேதா கோபாலன்



தமிழகம் சிலைகளுக்குப் பேர் போனது. ஆனால் நிஜ ஆடைகளுடன் சிலைகளைப் பார்த்து இருக்க மாட்டோம். திருச்சி பி.எச்.இ.எல். நுழைவாயிலில் காமராஜர் சமீப காலமாக வெள்ளை உடையில் ரம்மியமாகக் காட்சி தருகிறார்.

— ஆங்கரை ஆனந்.

கொண்டாடற பிரபல மனிதரோட மனைவியாய் இருக்கறது எத்தனை பாக்கியம்... இல்லையா?"

ஆச்சரியமாய் இருந்தது. நான் கேட்க வேண்டிய கேள்வியை வரிக்கு வரி என் காதலி கேட்டுக் கொண்டிருந்தாள்.

"காப்பியைக் குடிங்க..." என்றாரே தவிர பளிச்சென்று ஒரு பதிலையும் சந்தோஷத்தையும் காணோம். உலகம் முழுவதும் கொண்டாடுபவர்களுக்குக்கூட வீட்டில் சில சமயங்களில் வரவேற்பு இருப்பதில்லை என்று தெரிந்தபோது மனசு நொந்தது.

"இது மாதிரி அவார்டெல்லாம் அவருக்கு வர்றபோது உங்க மனநிலை எப்பிடி இருக்கும்?" என்று இன்னொரு விதமாய்க் கொக்கி போட்டுப் பார்த்தேன்.

"ப்ச். ஏதோ இருக்கும்." என்று அந்த அம்மாள் சொன்ன போது இந்த ரசனை கெட்ட. ஆத்மாவிடம் ஏண்டா பேச வந்தோம் என்றாகிவிட்டது.

"கரெக்டுதான். உங்களுக்கு நிறைய அவார்டெல்லாம் பார்த்துப் பார்த்து அலுத்துப் போயிருக்கும் இல்லை.....?" கையிலிருந்த பிளாஸ்டிக் கவரில் அவருக்காக நான் கொண்டு வந்த ஜரிகை மாலை கையில் உறுத்தக் கேட்டேன்.

"நீங்களும் விடாமல் துருவித் துருவிக் கேட்கறதால சொல்றேன். அந்த மனுஷனுக்கு என்ன சிறப்பு வந்தாலும் எனக்கொண்ணும் கிடையாது..." என்றார் எரிச்சலாய்.

"ஏன்... ஏன்?" திகைத்துக் கேட்டேன்.

"ஏன்னா... அவர்... மனுஷனே இல்லை..."

"என்ன சொல்றீங்க? அவரை உலகமே பாராட்டுது. அவர் சாதனையில் உங்களுக்குப் பெருமை இல்லையா?"

"உலகம் போற்றி என்ன பிரயோஜனம்? பொண்டாட்டி மேல அவருக்கு ஒரு அக்கறை கிடையாது..." சலிப்பாய் வந்த குரல் அதிர்ச்சி வழங்கியது.

"ஒரு நாளாவது நான் சாப்பிட்டேனா, தூங்கினேனான்னு கேட்டிருப்பாரா? எனக்கு நூத்திநாலு டிகிரி ஜுரம் இருந்தபோதும் கூட அவர் எனக்கு ஒரு வாய்த் தண்ணிகூடத் தந்த தில்லை."

"இந்த கருமமே கண்ணாய் இருக்கறவங்க இதையெல்லாம் கவனிக்க மாட்டாங்கன்னு..."

"நானும் படிச்சவதான். பசி, தாகம், தூக்கம் தெரியாதுன்னுதான் சொல்வாங்க. இவருக்குச் சாப்பாடு சூடாய் இல்லைன்னா பொண்டாட்டி மேல தூக்கி தட்டோட விசிறி எறியத் தெரியும். ஒரு முழம் மல்லிகைப்பூ வாங்கித் தந்ததில்லை. நேத்திக்கு ஏன் உங்க கிளப்புக்கு வரலைன்னு கேட்டீங்களே... அவ வீட்டி..."

சட்டென்று நாக்கைக் கடித்துக் கட்டுப்படுத்திக் கொண்டாலும் விஷயம் புரிந்தது.

"இத்தனை சொல்றீங்களே.. அவருடைய ஆராய்ச்சிக்காக இன்னிக்கு அவார்டாய் வாங்கித் தன்றாரே, அதுக்கு யார் காரணம்னாவது சொல்லியிருக்காரா? நான் சின்ன வயசில் கண் வலி வந்தா, எங்க பாட்டி சொல்லித் தந்த ஒரு வைத்தியம் பண்ணிப்பேன். ஒருநாள் தோட்டத்தில் கீரை பறிக்கப் போனபோது எங்க பாட்டி காமிச்ச மூலிகை அங்கேயும் இருக்கறதைப் பார்த்து, அவர்கிட்டே கொண்டு வந்து காட்டிச் சொன்னேன். அதில்தான் ஆராய்ச்சி சூடு பிடிச்சது.. ஒரு பேட்டியிலாவது அதைச் சொல்லியிருப்பாரா உங்க விஞ்ஞானி?"

"மேடம்... இதையெல்லாம் அப்பிடியே... பத்திரிகைல போடலாம்னு நீங்க சொன்...."

"ஐயோ... வேணாம்ப்பா. அந்த ஆளுக்குக் கோபம் வந்தால் தலைகால் தெரியாது. என்னை அறைஞ்சார்னா பத்து நாளைக்கு ஜுரத்தில் படுத்திடுவேன்."

என்னது! பெண்டாட்டியை அடிப்பதா! எனக்குள் பொலபொலவென்று எதுவோ சரிந்தது.

சட்டென்று பிளாஸ்டிக் பையிலிருந்த மாலையை எடுத்தேன். "ஹனி.... போடு" என்றேன்.

"உண்மையாகவே மூலிகை கண்டுபிடிக்கக் காரணமாய் இருந்தது மட்டுமில்லை... இத்தனை மோசமானவருடன் வாழும் பொறுமைக்காகவும்" என்று சொல்லிக் கண் காண்பிக்க, அவள் மாலையைப் போட்டாள்.

வெளியே வந்தபோது பித்தளை போர்டு, 'விஞ்ஞானி பரதன்' என்றது. உள்ளே வரும் போது இதைக் கும்பிட நினைத்த பைத்தியக் காரத்தனத்துக்கு வருந்தினேன்.

"வா ஹனி..." என்று மோட்டார் சைக்கிளை உதைத்த போது வேறு யாரையோ உதைத்துப் பழிதீர்க்கிற உணர்வுடன் வண்டியைக் கிளப்பினேன்.



• கொத்தவால்சாவடி

**கே**ரள மாடல்: ஓட்டு மேற்கூரை. ஐயப்பன் கோயில் கேரளாவிலிருந்து குடிபெயர்ந்து வந்துவிட்டதோ என்று வியக்க வைக்கும் வடிவமைப்பு. ஆனால் அது கோயிலும் அல்ல, சினிமா செட்டும் அல்ல! சென்னைப் பெருநகர் வளர்ச்சிக் குழுமத்தால் (MMDA) கட்டப்பட்டுள்ள கோயம்பேடு மொத்த காய்கறி மார்க்கெட். இங்கே பூ, பழத்துக்குக் கூட தனித்தனி அங்காடிகள் உண்டு. (அத்தனையும் கிரானைட் கல் ஐயா!)

தே(தா)ரோடும் வீதிகள். வளாகத்தின் உள்ளே வரிசையாகக் கடைகள். அவற்றுக்குப் பின்புறம் ஸர்வீஸ் லைன்.

லாரி வந்து கடைகளுக்கு சரக்கை இறக்க தனிப்பாதை. லட்சம் பேர் வந்தால் கூட நெருக்கடி தெரியாத அளவுக்கு ஒரே தாராள மயம்! காற்று, வெளிச்சம் கஞ்சத்தனம் இல்லாமல் வருகின்றன. இத்தனையும் இருந்தும்... கடைகளில் மனிதர்களுமில்லை, சரக்குமில்லை...!

கொத்தவால் சாவடி குடிபெயர்வதற்காகக் கட்டிய மார்க்கெட் இது. இங்கு கடைகள் திறக்க வழியில்லாமல் இருப்பது ஏன்...?

**ஓ**வர் டு கொத்தவால் சாவடி!

ஐந்து கிரவுண்டில் கட்டப்பட்ட அந்தக் கால மார்க்கெட். கொத்தவால் என்றால் செக்யூரிட்டி அல்லது வஸ்தாது என்றும் வைத்துக் கொள்ளலாம். இடம் கன்னிகா பரமேஸ்வரி கோயிலுக்குச் சொந்தமானது. உயர்ந்து கொண்டே போகும் மக்கள் தொகைக்கு ஏற்ப கொத்தவால் சாவடியும் தன் கை, கால்களை நீட்டி அக்கம் பக்கத்துத் தெருக்களுக்கு விரிந்து விட்டது. இன்று சென்னை, மற்றும் சுற்றியுள்ள 72 மார்க்கெட்டுகளில் உள்ள கடைக்காரர்கள் கொத்தவால் சாவடிக்கு வந்துதான் காய்கறிகளை வாங்கிச் செல்கின்றனர். நாம் தூங்கும்போது கொத்தவால் சாவடி விழித்துக் கொண்டிருக்கும். இரவெல்லாம் காய்கறி, பழம் என்று வந்து இறங்கிக் கொண்டே இருக்கின்றன. ஓட்டி வந்த களைப்பில் டிரைவர்கள் சரக்கு அடித்துவிட்டு, ஸ்டியரிங் மீது கவிழ்ந்து கொள்ள



• கோயம்பேடு மார்க்கெ

வெங்காயமும் உருளைக்கிழங்கும் கடைகளுக்கு இடம் பெயர்கின்றன.

அழுகும் பொருள் வியாபாரிகள் சங்கச் செயலர் விஜயரங்கத்திடம் நமது கேள்வியைக் கேட்கிறோம்:

"கட்டி முடித்த கோயம்பேடு மார்க்கெட்டுக்கு ஏன் இன்னும் போகவில்லை?"

"கரெக்டா சொல்லணும்னா 1978லே எம்.எம்.டி.ஏ. கோயம்பேடு கடைகள் பற்றி விளம்பரம் கொடுத்தாங்க. சுயநிதி திட்ட அடிப்படையில் கடைகளை ஒதுக்குறதாச் சொன்னாங்க.

## ஷாப் இருக்கு... சரக்கு இல்லையே!

அதாவது கடைகளுக்கான விலை யைத் தவணை முறையில் செலுத்தி சொந்த மாக்கிக்கணும்...

"1980இல், சதுர அடி நூறு ரூபாய் சொன்னாங்க. ஒப்பந்தம் போடும்போது 365 ரூபாயாக உயர்ந்து போச்சு! மொத்தம் நாற்பது தவணைகளில் பணத்தைக் கட்டணும். நாங்கள் (2209 பேர்) 13 தவணைகள் கட்டின பிறகு கடைகளை எங்ககிட்ட ஒப்படைக்கிறதாக ஒப்பந்தம். ஆனால், இப்போது 25 தவணைகளுக்கு மேல் கட்டியாகிவிட்டது. எம்.எம்.டி.ஏ. வாயிலே ஜிப் போட்டுக் கிட்டிருக்கு..." என்கிறார் விஜயரங்கம்.

இதற்கிடையே கோயம்பேடு மார்க்கெட் வளாகத்தை, ஷூட்டிங்குகளுக்கு வாடகைக்கு விட்டு பணம் சம்பாதித்துக் கொண்டிருக்கிறது எம்.எம்.டி.ஏ! மேன்ஹோல் கவர்கள் திருடப்பட்டு, கட்டடங்களுக்குப் பராமரிப்பும் போதாததால் நலிந்து வருகிறது.

எம்.எம்.டி.ஏ.வில் துருவிக் கேட்டால் ஆபீஸர்கள், ஆளாளுக்கு கைகாட்டிடபாய்த்தார்கள். (ஒருவர், 'இப்போதுதான் புதிதாக வந்தேன்' என்கிறார்.)

கோயம்பேட்டில்தான் மொத்த பழம், பூ, காய்கறி வியாபாரம் நடக்க வேண்டுமென்றும், சரக்கு லாரிகள் கோயம்பேட்டுக்குள்தான் வரவேண்டும் என்றும் ஒரு சட்டம் வர இருக்கிறதாம். மத்திய அரசின் ஒப்புதலுக்குப் போய் இருக்கிறதாம் இது! இந்தச் சட்டம் எதற்கென்றால் இப்பொழுதிருக்கும் கடைக்காரர்கள் கோயம்பேட்டுக்குப் போய் விட்டபின், புதிய கொத்தவால் சாவடி ஒன்று மீண்டும் உருவாகிவிடக் கூடாதல்லவா? அதற்காகத்தான்.

ஆனால் கடைக்காரர்கள் தன்னம்பிக்கையுடன் "சட்டம் வரும்போது வரட்டும்; எங்களிடம் கடைகளை ஒப்படையுங்கள்" என்கிறார்கள்.

எம்.எம்.டி.ஏ.வோ 'இந்தச் சட்டம் அமுலுக்கு வந்த பிறகுதான் முறைப்படி திறப்பு விழா நடத்தி, கடைகளை ஒப்படைப்போம்' என்று சொல்கிறதாம்.

ஆனால் இது வெளிப்படையாகச் சொல்லும் காரணமே தவிர தாமதத்திற்கு உண்மையான காரணம், கடைக்கு ஒரு லட்ச ரூபாய் வீதம் 'கொடுக்க' வேண்டுமென்று பேரம் நடக்கிறதாம்.

— ஸ்ரீநிவாசன்

படங்கள் : ராஜன்

◆ வீடியோடோர்-போன் வியக்க வைத்தது. ஸ்பென்சர் பிளாசா மலைக்க வைத்தது. சசிகலா-ஷாப்பிங் சிரிக்க வைத்தது. மொத்தத்தில் 'ஷாப்பிங் ஸ்பெஷல்' ருசித்தது.
சென்னை - 91, என். கார்த்திகேயன்.

◆ ஷாப்பிங் சென்டருக்குக் கிளம்புமுன் நம்மை எப்படித் தயார் செய்து கொள்ள வேண்டும் என்பதை அழகாக விளக்கிய 'ஷாப்பிங் போறீங்களா?' கட்டுரை மிக உபயோகமாக இருந்தது. நன்றி!
கபிஸ்தலம், வினோத் பிரியன்.

◆ தங்கள் ஸ்கூலுக்காக ஒரு வால் கிளாக் வாங்கிய பரமேஸ்வரியின் நல்ல உள்ளத்திற்கு ஒரு சபாஷ்!
மணியக்காரன்பாளையம், ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

◆ ஒரே கல்லில் இரண்டு மாங்காய் அடித்து விட்டீர்களே. முதல் மார்க் வாங்கிய மாணவிக்கு பரிசு அளித்த மாதிரியும், ஒரு நல்ல கட்டுரைக்கு நியூஸாகவும் ஆக்கிவிட்டீர்களே! சபாஷ்!
ஸ்ரீரங்கம், எஸ். மீனா.

◆ எந்த ஒரு காரியத்தைத் தொடங்கும் போதும் பிள்ளையார் சுழி போட்டு தொடங்குவது நமது பண்பாடு. அதனைக் கருத்தில் கொண்டு மலைக் கோட்டை பிள்ளையாரைக் கொண்டு தம் தொடரைத் தொடங்கியிருக்கிறார் கபிலவம்! தெரிந்த சில விஷயங்களுடன் தெரியாத பல விஷயங் களை சுவைபடக் கூறுவது மிக மிகக் கடினம். தொடக்கம் முதல் முடிவு வரையில் சுவை குன்றாது இத்தொடர் பீடுநடை போடும் என்பதில் சிறிதளவும் ஐயமில்லை.
வேலூர் - 7, பா.வை. சுவாமிநாதன்.

◆ வணிகர் குலப் பெண்ணுக்குப் பிரசவம் பார்த்தது சிவபெருமானல்லவா! உமது ஓவியர் விநாயகருக்குப் புடைவை கட்டிவிட்டிருக்கிறாரே!
சென்னை - 91, டி.என். பாலகிருஷ்ணன்.

◆ இருட்டு அரண்மனைகள் ஆரம்பமே செமை சஸ்பென்ஸ்! கதைக்குப் பொருத்தமாய் அரஸ் ஓவியம், மிக அட்டகாசம்.
நாட்டரசன்கோட்டை, எஸ். ரோஜா

◆ ரஜினியை எதிர்த்தோ, ஆதரித்தோ, அல்லது மேம்போக்காகவோ கருத்துக்களைப் பரப்பி வரும் பத்திரிகைகள் நடுவே, தெளிந்த சிந்தனையுடன் எல்லா தரப்பினரையும் உள்ளூர நிம்மதிப் பெருமூச்சு விடத்தக்க வகையிலான ஒரு நிலைப்பாட்டை ரஜினிக்கு எடுத்து உரைத்ததன் மூலம் 'கல்கி' தன் பொறுப்புணர்ச்சியை வெளிப்படுத்தியிருக்கிறது. மகிழ்ச்சி.
பொன்னேரி, ர. நாராயணகுமார்.

◆ தலையங்கத்தில் மக்கள் மனத்தில் நீங்கா இடம் பெற்ற ஒப்பற்றத் தலைவர் எம்.ஜி.ஆர். பற்றி எழுதியுள்ளதை ஏற்க முடியாது. அவரது ஆட்சி சரித்திரத்தில் போற்றுதற்குரியதாய் இல்லையென முழங்கியுள்ளீர்கள். நடிகர் நாடாள முடியுமா வென வினா எழுப்பியவர்களை வாயடைக்க வைத்தாரே, அதுவே சரித்திரப் புகழ்தான்.
ஓசூர், மு. இலக்கியா.

◆ கேரள முதல்வர் ஏ.கே. அண்டனியின் பேட்டி

எளிமையாக, சிறப்பாக இருந்தது!

ஊஞ்சவேலாம்பட்டி, டி. பகபதி.

◆ முதல் பரிசுக் கதை சிறப்பாக இருந்தது. லாபத்தை மட்டுமே குறிக்கோளாய்க் கொண்டு செயல்படும் தொழிற்சாலை நிர்வாகத்திடம், தன் மனசாட்சியை அடகு வைக்க இயலாமல் தவித்து, பதவியையே ராஜினாமா செய்யும் நேர்மையான சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பு அதிகாரியான ஆனந்தன் பாத்திரப்படைப்பு பாராட்டுக்குரியது.

நாகைப்பட்டினம், சந்திரா.

## ரூ. 20/- பரிசு பெறும் கடிதம்

◆ கல்கி 30.7.95 இதழில் ஒரு குழந்தைக்கு ஊசி போடும்போது ஊசி ஒடிந்து குழந்தையின் உடலுக்குள் தங்கியது பற்றி தராசு பதில் பகுதியில் எழுதப்பட்டுள்ளது. தனியார் மருத்துவ மனைகளில் நோயாளிகளிடமிருந்து கட்டணம் வசூலிக்கப் படுவதால் ஒருமுறை உபயோகித்து விட்டுத் தூக்கி எறியும் Disposable Syringeகள் புழக்கத்தில் உள்ளன. ஆனால் அரசாங்க மருத்துவமனைகளில் இவைகளை உபயோகிப்பது இல்லை. ஏனென்றால் அவற்றின் விலை அதிகம். பல தனியார் கம்பெனிகளிடம் "கொட்டேஷன்" கேட்டு மிகக் குறைந்த விலையில் கண்ணாடி சிரிஞ்சுகளையும் ஊசிகளை யும் வாங்கி அரசாங்கம், மருத்துவமனைகளுக்கு சப்ளை செய்கிறது. ஆகவே ஊசிகளின் தரமும் குறைவாகத்தான் இருக்கும். இந்நிலையில் அவற்றை உபயோகிக்கும் போது ஒடிந்து போவதில் என்ன அதிசயம்?

மாத்தூர், எச். சுப்பிரமணியன்.

◆ இன்னும் ஐம்பது வருடம் கழித்து "பார்த்திபன் கனவு" ஏழாவது முறையோ, எட்டாவது முறையோ வெளியாகும். அதை எனது கொள்ளுப் பேரன் படித்துவிட்டு, "ஆஹா! மனிதர் என்னமாய் எழுதியிருக்கிறார்" என வியந்து கொண்டிருப்பான்.

திருவண்ணாதபுரம், தி.சு. பாலசுப்பிரமணியன்.

◆ இதுவரையில் நான் 'கல்கி'யின்

# இதற்குப் பெயர்தான் பாலசந்தர் 'டச்'சா?

சரித்திர நாவல்கள் எதையும் படித்தது இல்லை. ஆனால், பார்த்திபன் கனவைப் படித்தவுடன் சரித்திர நாவல் என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்பதற்கு எடுத்துக் காட்டாய் அது இருந்தது.

தஞ்சாவூர் - 5, வனிதா ரவி.

◆ சரித்திரக் கதை எழுதுவதில் கல்கி முடிசூடா சக்கரவர்த்தியாய் அன்றும், இன்றும், என்றும் திகழ்வார்.

சிதம்பரம், வி. சுகவனம்.

◆ உலகத்தின் எந்தப் பகுதியிலாவது சுதந்தர வேட்கையும், சுதந்தர தாகமும் உள்ள வாலிபர்கள் இருக்கும் வரை சிரஞ்சீவியாக இருக்கும் அமரகாவியம் பார்த்திபன் கனவு. கோபுலுவின் தூரிகைகள் கதைக்கு மெருகு ஊட்டின!

நெய்வேலி, கே.வி. நாதன்.

◆ கடந்த 53 வாரங்களாக எங்களோடு உறவாடி, தமது சீரிய கருத்துக்களாலும், அருமையான 'கொட்டேஷன்'களாலும் எங்களை உற்சாகப்படுத்தி, எங்களுடன் இரண்டறக் கலந்து விட்ட இயக்குநர் பாலசந்தரின் தொடர் இதற்குள் நிறைவு பெற்றுவிட்டது கொஞ்சம் வருத்தம்தான்!

சென்னை - 30, புளியரை கணேசன்.

◆ தமிழகத் திரையுலகில் மூன்று தலைமுறைகளுக்கு மேலாகக் கோலோச்சிக் கொண்டிருக்கும் இயக்குநர் சிகரம் பாலசந்தரைச் சற்று அந்தரங்கமாகப் புரிந்து கொள்ள உதவியது அவரது 'நினைவலைகள்'.

தஞ்சாவூர், எஸ். விஜயகுமார்.

◆ டைரக்டர் பாலசந்தரின் தொடர் முடிந்ததே தெரியாத அளவிற்குச்

• மெருகூட்டிய தூரிகை



• நிறைவு தந்த தொடர்



சென்றது அருமை. எந்தவித தொய்வும் எங்கேயும் இல்லாதது சிறப்பு. ஒரு வேளை இதற்குப் பெயர்தான் பாலசந்தர் 'டச்'சா?

நெல்லிக்குப்பம், தமிழ்ப்பரிதி.

◆ சொன்னால் நம்ப மாட்டீர்கள். நான் கே.பி. படம் ஒன்று கூடப் பார்த்ததில்லை. (பொதுவாகவே சினிமா பிடிக்காது!) ஆனாலும் அவரது தொடரை விடாது படித்து வந்தேன். என்னைக் கவ்வி இழுத்த 'நினைவலைகளை' அடுத்த வார இதழ் வருவதற்குள் அட்லீஸ்ட் 50 முறையாவது படித்து விடுவேன்! என்ன காரணம் என்று இன்னும் புரியவில்லை!

சிதம்பரம், சிவா. கண்ணதாசன்.

◆ பாலசந்தரின் "நினைவலைகள்" தொடர், முன்னேறத் துடிப்பவர்களுக்கு சொல்லித் தந்த விஷயங்கள் நிறைய! "Every duty is holy, and devotion to duty is the highest form of worship of God." என்று சுவாமி விவேகானந்தர் சொன்னதின் அர்த்தம் இப்போது புரிகிறது.

திருப்பூர் - 1, எல்விபி.ஆர். ஆனந்த்.

ஜெயேந்திரர் மணிவிழா :

# ஜொலித்

ஆகஸ்ட் 11...

கலகலத்துக் கொண்டிருந்தது காஞ்சிபுரம்! பெருகும் மக்கள் வெள்ளம்... பிரமுகர்கள் கூட்டம்... திணறும் போலீஸ்... காற்றில் ஆடும் பேனர்கள்...

''சனாதன தர்மங்களின் பாதுகாவலரே'', ''காமாட்சி அம்மன் கோயிலுக்குத் தங்க விமானம் அளித்த குருவே!'', ''கண்ணொளி திட்டம் வழங்கிய ஆசாரியரே!''

காஞ்சி காமகோடி பீடத்தின் 69-வது பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் மணிவிழா!

காமாட்சி அன்னையின் கோயிலில், காலை ஏழு மணிக்குக் கண்கொள்ளாக் காட்சி காத்திருந்தது! 61 பால் குடங்களினால் அன்னைக்கு அபிஷேகம் செய்தார், தர்மகர்த்தாவான ஸ்ரீ ஜெயேந்திரர். (காஞ்சி காமகோடி பீடாதிபதிகளே காமாட்சி கோயில் தர்மகர்த்தாக்களாக இருப்பது வழக்கம்!)

ஞானப் பழமாக, மோனச் சிறப்பாக, அருட்புனலாக வாழ்ந்து மறைந்த ஸ்ரீ சந்திரசேகரேந்திர சுவாமிகளின் இடம், இட்டு நிரப்ப முடியாத ஒன்று என்பதில் இருவேறு கருத்துக்கள் இல்லைதான். அதே சமயம் ஆன்மீகத்தோடு சமூகப் பணிகளிலும் கவனம் செலுத்தும் அவரது வழித்தோன்றலான ஸ்ரீ ஜெயேந்திரரின் பாதையும் போற்றத்தக்கதாகவும், நமது பணிவு வணக்கங்களுக்கு உரியதாகவும் அமைந்திருக்கிறது என்று ஆங்காங்கே பேசிக் கொண்டிருந்தார்கள் மக்கள். இனிய குருவின் சஷ்டியப்தபூர்த்தி நாளை இனிப்பு வழங்கிக் கொண்டாடினார்கள் சிலர்!

முன்னதாக, 'வர முடியாமல் போன' பிரதமரின் மகளும் மருமகனும் வந்திருந்து, பெரியவரை தரிசித்தார்கள்.

கர்நாடக முதல்வர் தேவே கௌடா, மத்திய அமைச்சர் வெங்கடசாமி, கிரேக்க இளவரசர், முதல்வரின் தோழி இப்படிப் பலர் முதல்நாளே வந்து, தரிசித்துப் போய் விட்டார்களாம்!

காலை ஒன்பது மணிக்கு மடத்திலுள்ள சந்திரமௌளீஸ்வரருக்குப் பூஜை செய்யத் தொடங்கினார் ஜெயேந்திரர். கைலாயத்திலிருந்து தாம் கொண்டு வந்த ஐந்து ஸ்படிக லிங்கங்களில், யோக லிங்கத்தைக் காஞ்சியில் ஆதிசங்கரர் ஸ்தாபிக்க அந்த லிங்கமே ஸ்ரீ சந்திரமௌளீஸ்வரர் என்று அழைக்கப்படுகிறது!

பூஜை நடந்து கொண்டிருந்த அதே சமயம் மடத்தின் பின்புறத்தில் அமைந்துள்ள ஸ்ரீ மஹா சுவாமியின் பிருந்தாவனத்துக்கு (ஒன்றரை ஆண்டுகளுக்கு முன் இறைவனுடன் ஐக்கியமான ஸ்ரீ சந்திரசேகர சுவாமிகளின் சமாதி) அருகே ஸ்ரீ ஜெயேந்திரருக்கான மணிவிழா ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன.

உலகின் அத்தனை பெண்மணிகளையும் அன்னையாகப் பார்க்கும் பக்குவம் பெற்ற ஜெயேந்திரரைப் பத்து மாதம் சுமந்தவரும் கூட்டத்தோடு அமர்ந்து இருந்தார்! ஆன்மிக உலகுக்கு அருந் தவப புதல்வனை அளித்த ஆனந்தம் அவ்வப்போது



• தம் குருவுக்குப் பாத பூஜை செய்கிறார் ஜெயேந்திரர்

# ...து காஞ்சி!



அந்தத் தாயின் கண்களிலிருந்து வழிந்து கொண்டிருந்தது!

உயரமான மேடையொன்றில் (ஆங்காங்கே வெல்வெட் பதித்த) வெள்ளி சிம்மாசனம் ஒன்று காட்சியளித்தது. அதன் இரு கைப்பிடிகளிலும் சிம்ம உருவங்கள். மஹா பெரியவரின் பெரிய ஓவியம் ஒன்று சிம்மாசனத்துக்கு அருகே வைக்கப்பட்டிருந்தது. அடுத்து சிம்மாசனத்தின் மீது காவி வஸ்திரம் ஒன்று பரப்பப்பட்டது. தம்பதி பூஜைக்காக 61 தம்பதியர் காத்திருந்தனர்!

பூஜையை முடித்துக் கொண்டு 12.15க்கு ஜெயேந்திரர் அந்த இடத்துக்கு வந்தார். பித்தளைத் தொட்டியொன்றில், பிருந்தாவனத்துக்கு நேரெதிரான ஓர் இடத்தில் அவர் அமர, அவருக்குக் கலசாபிஷேகம் செய்தார் ஸ்ரீ விஜயேந்திரர்.

பூர்ணாஹுதியும் தானங்களும் நடந்தேற, முன்னாள் ஜனாதிபதி வெங்கட்ராமன் பேசத் தொடங்கினார். 'வாழ்நாளிலேயே தாம் இப்படி ஒரு கூட்டத்தைப் பார்த்ததில்லை' என்றார். காஞ்சி பீடத்தின் தொன்மையை விளக்க, சிறு கணக்கொன்றைத் தந்தார்.

இடைவெளியின்றிப் பீடாதிபதிகளால் அலங்கரிக்கப்படும் பேறு வாய்ந்த இந்தப் பீடத்தில், ஒவ்வொரு பீடாதிபதியும் முப்பது ஆண்டுகள் இருந்தார் என்றாலும் கூட இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு - அதாவது கிறிஸ்து பிறப்பதற்கும் முந்தையது காமகோடி பீடம் என்கிறார். அறுபத்தி இரண்டாவது பீடாதிபதி (அவருடைய பெயரும் சந்திரசேகர சரஸ்வதிதான்) எழுதிய "சிவகீர்த்திமாலா" என்ற நூல் விரைவில் நாட்டிய நாடகமாகப் போகிறது என்ற தகவலையும் தெரிவித்தார்.

12.45 மணி. ஸ்ரீ ஜெயேந்திரர் வெள்ளி இருக்கையில் அமர்ந்தார். ஆளுயரத்தை விட அதிக உயரம் கொண்ட பருத்த மாலைகள் இரண்டு அவர் தோள்களில் சூட்டப்பட்டன! அவரது பாதத்தினருகே அமர்ந்து கொண்டு அர்ச்சனை செய்தார் ஸ்ரீ விஜயேந்திரர். பிறகு நின்றபடி புஷ்பாஞ்சலியும் செய்தார். மலர்கள் சரசரவென்று அவரது பாதங்களை நோக்கி இறங்கி, சிறிது சிறிதாக அந்த மலர்க்குவியல் அவரது இடுப்பு அளவுக்கு உயர்ந்த காட்சியைக் காணக் கண் கோடி வேண்டும்!

அர்ச்சனைப் பொழுது முழுவதும் கண்களை மூடியபடி ஜெபித்துக் கொண்டிருந்த ஜெயேந்திரர், அர்ச்சனை முடிந்த அடுத்தகணமே தோளிலிருந்த 'பூபாரத்தை' நீக்கிக் கொண்டார்!

அடுத்து அவருக்கு ருத்ராட்சக் கிரீடம் ஒன்றைச் சூட்டி மகிழ்ந்தார் பால சுவாமிகள்! ஸ்ரீ ஜெயேந்திரரின் முகத்தில் அவருக்கேயுரிய மந்தஹாசப் புன்னகை விரிந்தது. பிறகு சொர்ண புஷ்பங்களைக் (தங்கக் காசுகள்) கொண்டு பாதபூஜை செய்தார் இளையவர்.

மணிவிழா நிறைவடைய, பக்தர்கள் ஆசாரியரின் பாதங்களில் பணிய விரைந்தனர். குருவருள் மூலம் திருவருள் பெறத் துடிக்கும் மக்களின் எண்ணிக்கை அதிகமென்றாலும், பொறுமையோடு சிநேகபூர்வமாக சிரத்தை ஆட்டியபடி ஆசி கூறினார் ஜெயேந்திரர்!

"ஜெய ஜெய சங்கர ஹரஹர சங்கர" கோஷங்கள் மடத்தையும் மனத்தையும் நிறைத்தன.

- அருண்சரண்யா

படம் : யோகா

# மியூஸிக் ரவுண்ட் அப்

தினம் தினம் யாரேனும் ஒரு முதுபெரும் கலைஞருக்குப் பாராட்டு விழா அல்லது ஓர் இளம் கலைஞருக்கு விருது வழங்கும் விழா என அமர்க்களப்படுகிறது சென்னை. எனினும் வருடாந்திர விருதுகளில், கிருஷ்ண கான சபா வழங்கும் நிருத்திய சூடாமணி, சங்கீத சூடாமணி விருதுகளுக்குத் தனி மதிப்பு. விருது வழங்கி சிறப்பிக்கும் கி.கா. சபைச் செயலரைப் பாராட்டி ஒரு விருது வழங்கப் பட்டது சமீபத்தில். வழங்கியவர்கள் : கிளீவ் லாண்ட் ஸ்டேட் யூனிவர்சிடியின் தியாகராஜ ஆராதனைக் குழு. 'இம்போர்டட்' கௌரவத்தை யக்ஞராமன் அடைந்தபோது, "அவர் முனைப்பால் நிருத்திய சூடாமணி பெற்ற நட்சமணிகள் அவரைப் பாராட்ட முன்வர வேண்டாமோ?" என்று நியாயமா... ...ருத்தப்பட்டுக் கொண்டார் ஒரு நண்பர்

பட்டம்!

கிருஷ்ண கான சபை, இப்பட்டத்தை வழங்கிய போது பேசிய மியூசிக் அகடமி செயலர் டி.எஸ். பார்த்தசாரதி, "இந்த சபாவில் வயது, சீனியாரிட்டி எல்லாம் பார்க் கிறதில்லை. அதனால் சின்ன வயசிலயே விருது கிடைச்கடுறது. மியூசிக் அகடமியில், 70-75 வயதுக்கு மேல் தான்


• யக்ஞராமன்


• சிவராமன்

...ங்கீத கலாநிதி' கிடைக்கும்" ...ன்று ரொம்ப 'ஓப்பனாகவே' ...ப்புக் கொண்டுவிட்டார்.

'ரொம்ப ரிஸ்க்' ...ன்று மகன் எச்சரித்தும் ...டிவாதமாகக் கொழும்பு ...போய் வந்திருக்கிறார் ...மயாள்புரம் சிவராமன்.

வெடி குண்டுச் சத்தத் ...ற்குச் சளைக்காமல் தம் ...ருதங்க ஒலியை ஐம்பது ...ண்டுகளாக இசைத்து வரும் ...ணேச சர்மாவைப் பாராட்டப் போனார் சிவராமன். பல விழாக்கள், நிகழ்ச் சிகளில் பங்கேற்றவர், சிரிமாவோ பண்டார நாயகாவையும் சந் தித்துப் பேசியிருக் கிறார். மனைவி

• வீணையும் விசித்திர வீணையும்!

விதிவிலக்காக, வந்திருந்ததுடன் வாழ்த்தவும் செய்தவர் லக்ஷ்மி விசுவநாதன் மட்டும்.

ஆறு வயதுக்குள் நூறு ராகங்களுக்கு மேல் கண்டுபிடித்து, குழந்தை மேதையாக அறிமுகமாகி, கோட்டு வாத்தியத்தில் சாதனை புரிந்து, அதற்கு விசித்திர வீணை என்று புதுப் பெயரிட்டு பிரபலப்படுத்தி சமீபத்தில் இளம் வீணைக் கலைஞர் ஜெயந்தியை மணந்து, 'கணவன்' என்ற அந்தஸ்துக்கும் உயர்ந்த ரவிகிரணுக்கு இவ்வாண்டு 'சங்கீத சூடாமணி'

அபிராமி, சிரிமாவோவுக்குப் பொன்னாடை போர்த்த, சிவராமன் தியாகராஜ ஸ்வாமியின் படத்தைக் கொடுத்து திருவையாறு பற்றி விளக்கியிருக்கிறார்.

"எவ்வளவு எளிமையாக வீட்டு மனிதர்களுடன் பேசுவதுபோல் பேசினார்!" என்று சிவராமனுக்கு வியப்பு.

பண்டாரநாயகா - பந்தா இல்லாத நாயகா!

- சாருகேசி

# Kalki Shopping Page



ADYAR
## STUDENTS XEROX

*Quality that is close to perfection*

XEROX
LASER PRINTING
WORD PROCESSING
DTP
ELECTRONIC &
MANUAL TYPING
BINDING &
LAMINATION

## RANI SAREES

**NOW SEPECIAL QUALITY AVAILABLE**

## BENGAL COTTON SAREES

BEST QUALITY ATTRACTIVE DESIGNS AND COLOURS
10% DISCOUNT ON BENGAL COTTON ONLY.
AVAILABLE ON WHOLE SALE ALSO

## MADURAI TEXTILES

2, SIVAPRAKASAM ROAD,
PONDY BAZZAR,
MADRAS - 17.
(Nearer to Vegetable Market)

## நடராஜ் ஃபைனான்ஸ்

கனிவான சேவை;பணிவான வரவேற்பு; வலுவான தொழில் முதலீடுகள்.

**24% P. A.** + 4 % + 1 % + **1 கிராம் தங்கக் காசு**

(மேலும் சில தினங்களுக்கு மட்டுமே இச்சலுகை)

**மினிமம் டெபாஸிட் ரூ.10000 ■ காலம் 12 மாதங்கள்**

12 மாதங்கள் 24 மாதங்கள் 36 மாதங்கள் 48 மாதங்கள்

* 36 மாதங்களுக்கு ரூ.12,000 டெபாஸிட் செய்து 3 சவரன் தங்கம் பெறும் திட்டம் * சீட்டு குருப்பில் சேர்கிறவர்களுக்கு பல்வேறு ஆதாய திட்டம் * பண்ணை வீடு சொந்தமாகும் மாதாந்திர திட்டம் * சித்திர ராமாயணம் சலுகை விலையில் பெறுவதற்கு முன் வெளியீட்டுத் திட்டம் *



**Phone : 4342098, 4840150**

NATARAJ FINANCE & INVESTMENTS
NATARAJ CHITS (TAMILNADU) PVT. LTD.,
NATARAJ ESTATES - FARM HOUSE PROMOTERS,
"Shanthi Complex" 3rd Floor, T. Nagar, Madras - 600 017



2-B. Selvam Nagar, Medical College Road, Tanjore - 613007. 1B. Kamarajar Road, Kancheepuram - 631 501

CHIT & FINANCE


OIL MILLS



EXPORTS


FARM HOUSE


PUBLICATIONS




**2**

# மூன்றாவது

*23 ஜூன் 1975.*

மத்திய பிரதேசத்தில் 'MHOW' என்ற ஆர்மி டிரெயினிங் சென்டரில், ராணுவ அதிகாரிகளுக்கு உள்துறை பாதுகாப்பு பற்றிய நுணுக்கங்களை விளக்கப் போயிருந்தேன்.

இருபத்தைந்தாம் தேதி மாலை வகுப்புகள் முடிந்து, என் அறைக்குப் போய் மாலை தினசரிகளைப் புரட்ட ஆரம்பித்ததும் அதிர்ச்சியாக அந்தச் செய்தி உடனே கண்ணில் பட்டது.

'உள்துறைச் செயலாளர் என்.கே. முகர்ஜி பதவி மாற்றம்!'

அதிர்ச்சியிலிருந்து மீள்வதற்குள் செய்தி வந்து விட்டது. இந்திரா, 'எமர்ஜென்ஸி' அறிவித்திருக்கிறார். நாடு முழுவதும் தலைவர்கள் பலர் கைது செய்யப்பட்டு விட்டனர். பல அரசு அதிகாரிகள் இலாகா மாற்றம் செய்யப்பட்டிருக்கின்றனர்...

நான் உடனே டெல்லிக்கு விரைந்தேன். என் வீட்டில் எனக்கும் அரசுச் செய்தி காத்திருந்தது-

'புதிய உள்துறைச் செயலாளராக, குரானா அமர்த்தப்பட்டிருக்கிறார். உடனே உள்துறை அமைச்சகத்துக்கு வரவும்.'

நான் ஓடினேன்.

அங்கே போனதும்தான் தெரிந்தது. முகர்ஜி மட்டுமல்ல; கூடுதல் செயலாளர் சீனிவாச வரதனும் மாற்றப்பட்டிருக்கிறார்!

நான் முடிவு செய்தேன். 'சரி; அடுத்த ஆள் நாம்தான்... இன்னும் இரண்டு மூன்று நாட்களுக்குள் மூட்டை கட்டத் தயாராக வேண்டும்...'

ஆனால் என்ன காரணமோ - தொடர்ந்து நான் அங்கேயே இருக்கப் பணிக்கப்பட்டேன்! பழைய, பழகிய ஆள் ஒருவராவது துறைத் தலைமை இடத்தில் வேண்டும் என்று நினைத்தார்களோ என்னவோ!

புதிய செயலாளர் குரானாவுடன் பேசிவிட்டு வெளியே வந்தேன். முதல் வேலையாக, உள்துறை அமைச்சகத்தில் ஒரு கன்ட்ரோல் ரூம் அமைக்கும் பணி எனக்கு இருந்தது.

அதாவது, எமர்ஜென்ஸி அறிவிக்கப்பட்டதும் கைதானவர்கள் பற்றியும் கைதாகப் போகிறவர்கள் பற்றியும் விவரங்கள் தொகுத்தல், அந்தந்த மாநிலங்களில் நிலைமை கட்டுப்பாட்டில் இருக்கிறதா என்று கண்காணித்தல், முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளைச் சரிபார்த்தல் இவற்றுக்காக அந்த கன்ட்ரோல் ரூம்.

ஓர் அரசு ஊழியனாக இவைகளைச் செய்து கொண்டிருக்கும்போதே, நாடு போய்க்கொண்டிருக்கும் விபரீதப் பாதை குறித்துக் கவலை கொள்ளாமல் இல்லை.

எமர்ஜென்ஸி அமுலில் இருந்து இரு பதாண்டுகள் நிறைந்து, சமீபத்தில் அது குறித்துக் கூட்டங்களெல்லாம் நடந்திருக்கிற நிலையில், ஏன் அன்று அத்தகைய சூழ்நிலை உருவானது என்று சற்று யோசித்துப் பார்ப்பது பொருத்தமாக இருக்கும் என்று தோன்றுகிறது.

ஒருவகையில் இந்திரா, எமெர்ஜன்ஸி அறிவித்ததற்கு ஜெயப்பிரகாஷ் நாராயணன் தான் மூலகாரணம் எனலாம்.

பிரதான எதிர்க்கட்சித் தலைவர்களுள் ஒருவரான அவருக்கு வடக்கே பெரிய செல்வாக்கு இருந்தது. குறிப்பாக மாணவர்களிடம்.

இந்திரா அரசில் நடைபெற்ற ஊழல்கள், ஒழுங்கீனங்கள் பற்றிய அவரது மேடைப் பேச்சுகளும் அறிக்கைகளும் வடக்கே - குறிப்பாக

குஜராத்திலும் பீகாரிலும் – பெரும் புரட்சிகரமான விளைவுகளை ஏற்படுத்தின. குஜராத்தில் 'நவநிர்மாண்' என்கிற மாணவ அமைப்பு, மக்களிடையே விழிப்புணர்வு ஏற்படுத்தும் விதமாக கிளர்ச்சி செய்ய ஆரம்பித்து, அது பிற மாநிலங்களுக்கும் பரவியது.

ஒரு கட்டத்தில், ஒரு பொதுக் கூட்டத்தில் ஜே.பி., "ராணுவம், போலீஸ் இரு பாதுகாப்புத் துறையினரும் இந்த ஊழல் அரசின் பேச்சைக் கேட்காது, தன்னிச்சையாகச் செயல்பட வேண்டும்!" என்று பேசப் போக, நிலைமையின் தீவிரம் இந்திரா காந்தியை வெகுவாகக் கலங்க வைத்தது.

பிரசித்தி பெற்ற அலகாபாத் உயர்நீதி மன்றத் தீர்ப்பு வேறு (எலக்ஷனில் இந்திரா விதிகளுக்குப் புறம்பான செயல்களில் ஈடுபட்டார் என்ற குற்றச்சாட்டுக்களைப் பற்றியது.) வந்து சேர, அவருக்கு நாலாபுறமும் எதிர்ப்பு வலுத்தது.

ஒரு கட்டத்தில், 'இந்திரா பதவி விலக விரும்புகிறார்' என்றொரு வதந்தி தில்லியில் பலமாக உலவ ஆரம்பிக்க, அதே சமயம் சஞ்சய் காந்தி, சித்தார்த்த சங்கர் ரே போன்ற அவருக்கு நெருக்கமான சிலர், இந்திரா பதவி விலகாமல், நிலைமையை தீவிர நடவடிக்கைகள் மூலம் சமாளிக்க வேண்டும் என்று வற்புறுத்துவதாகவும் பேசப்பட்டது.

திண்

கடைசியில் தம் 'பவரை' நிரூபிக்க ஜூன் 25, 1975 அன்று எமர்ஜென்ஸியை ஜனாதிபதி பக்ருதீன் அலி அகமது மூலம் பிரகடனப்படுத்தினார்! உள்துறை அலுவலகத்துக்கு இது தொடர்பாக ஒரு அறிவிப்போ, குறிப்போ கூடக் கிடையாது!

ஒருத்தர் பாக்கி இல்லை. ஜே.பி., மொரார்ஜி, சரண்சிங் என்று பெரும் தலைவர்களிலிருந்து நாடு முழுவதும் உள்ள அத்தனை 'எதிர்க் குரலாளர்'களையும் அன்றே கைது செய்தார்கள்!

ஜூன் 26 அன்றே பத்திரிகை தணிக்கை உத்தரவு பிறப்பிக்கப்பட்டது!

கொடுமை என்னவெனில், ரயில்வே ஸ்டிரைக்கை முறியடிக்க உதவிய அதே Defence of India சட்டம்தான் எமெர்ஜன்ஸிக்கும் அடிப்படையாக அமைந்தது! ஆனால் இரு நிகழ்ச்சிகளுக்கிடையேயும் ஒரு மிகப் பெரிய வேறுபாடு :

ரயில்வே ஸ்டிரைக்கின் போது மாநிலங்களுக்கான உத்தரவுகள், அரசு அதிகாரிகள் மூலமே சென்றன;

எமர்ஜென்ஸியின் போது பிரதமரின் நோக்கங்களும் எதிர்பார்ப்புகளும் கட்சி மட்டத்திலேயே மாநிலங்களுக்குத் தெரியப் படுத்தப்பட்டன!

உள்துறை அதிகாரிகளான எங்களுக்கே, 'இந்த மாநிலத்துக்கு இன்று இந்த உத்தரவு போயிருக்கிறது' என்கிற விஷயம் மறுநாள் நியூஸ் பேப்பர் பார்த்துத்தான் தெரியவரும்!

எமர்ஜென்ஸி அறிவிக்கப்பட்ட முதல் இரண்டு மாதங்களில் நாட்டு நடப்புகள் மிகவும் பாராட்டும்படியாக, ஒரு முன்னுதாரணமாகவே இருந்தன.

அரசு நிர்வாகம் முடுக்கி விடப்பட்டது. ரயில்கள் நேரத்துக்கு வந்தன. விலைவாசி கட்டுக்குள் இருந்தது. பொதுக் கூட்டங்கள், ஊர்வலம், பேரணி... மூச்!

நிலைமை தலைகீழானது அப்புறம்தான்!

மக்கள் விமர்சனங்களை ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ள வேண்டாம் என்கிற அரசின் போக்கு, அதிகாரிகளுக்கு வெகுசாதகமாகப் போய் விட, ஊழல் எல்லா மட்டங்களிலும் தலைவிரித்து, பேயாட்டம் போட்டது! அட்டூழியங்களுக்கு அளவே இல்லாமல் போக, மக்கள் போக்கிடம் இன்றித் தவித்தார்கள்.

இதற்குள், அறிவிக்கப்பட்ட எமர்ஜென்ஸியை சட்டபூர்வமாக்க சகலவிதமான நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டு விட்டன. மிசாவின் கீழ் கைது செய்யப்பட்டவர்களுக்கு, ஏன் அவர்கள் கைது செய்யப்பட்டார்கள் என்று தெரியப்படுத்தக் கூட அவசியம் இல்லை என்ற அளவுக்கு மிசா சட்டமே திருத்தப்பட்டது! ஜனநாயகத்துக்குப் புறம்பாக நாடு



* ஜெய்பிரகாஷ் நாராயணன்




போய்க் கொண்டிருந்த நிலையில் –

நான், அந்த 5, 6 மாத எமெர்ஜென்ஸி கால கட்ட சூழ்நிலை பற்றி விரிவானதொரு குறிப்பு எழுதினேன்.

'நாடு மெல்ல சகஜ நிலைக்குத் திரும்ப வேண்டியது அவசியம். இப்போதைய நிலைமையில் கொஞ்சம் கொஞ்சமாக நெருக்கடி நிலையைத் தளர்த்த வேண்டியது கட்டாயம் என்று படுகிறது. கைதானவர்களை – அமைதி குலைப்பு காரணங்களால் கைதானவர்கள் தவிர்த்து – மெல்ல விடுவிக்க வேண்டிய வேளை வந்து விட்டதாகத் தோன்றுகிறது.'

– இது என் குறிப்பின் சாராம்சம்.

'நான் தன்னிச்சையாக இதனை எழுதவில்லை. பல மாநில உள்துறைச் செயலர்களுடன் கலந்து பேசி, ஆங்காங்கே நிலவரம் குறித்து அறிந்து கொண்டு, இப்படி ஒரு குறிப்பின் அவசியம் உணர்ந்தே எழுதினேன்.

எழுதி முடித்த குறிப்பை உள்துறை செயலாளர் குரானாவிடம் கொடுத்தேன்.

படித்துப் பார்த்தபின் அவர் மெல்லப் புன்னகைத்தார்.

"வெல், யூ கேன் ப்ரொஸீட்" என்று அவரும் பச்சைக் கொடி காட்ட, நான் சந்தோஷத்துடன் குறிப்பை உள்துறை அமைச்சர் பிரும்மானந்த ரெட்டிக்கு அனுப்பினேன். அவர் மூலம் அது இந்திரா காந்தியின் நேரடிப் பார்வைக்கும் போனது.

சில நாட்கள் கழித்து குரானா என்னைக் கூப்பிட்டார்.

"ஸாரி நரசிம்மன். யுவர் 'நோட்' இஸ் நாட் அப்ரிஷியேட்டட் பை தி டாப்."

நான் உடைந்து போனேன். உள்துறை அமைச்சருக்குச் சம்மதமில்லையென்றால் பிரதமர் கவனத்துக்குப் போக வேண்டிய அவசியமில்லை. எனில், பிரதமர் வரை போய், பின் ஏற்கப்படவில்லை என்றால், பிரதமருக்குப் பிடிக்கவில்லை என்றுதானே அர்த்தம்?

என் 'குறிப்பி'ன் பின்விளைவுகள் விரைவில் தெரிய ஆரம்பித்தன.

உள்துறைக்கு இன்னொரு இணைச் செயலாளராக 'சித்து' நியமிக்கப்பட்டார். (1988 வாக்கில் ஜனாதிபதி ஆட்சி அமுலில் இருந்த போது இங்கே கவர்னராக இருந்த பி.சி. அலெக்சாண்டருக்கு ஆலோசகராக இருந்தவர் - ஞாபகமிருக்கிறதா?)

எமர்ஜென்ஸி நடவடிக்கைகளையும் மாநிலங்களுடனான நேரடித் தொடர்பையும் அவர் கவனிக்க ஆரம்பிக்க, எனக்குப் புரிந்தது...!

இந்திரா குடும்பத்துக்கு – குறிப்பாக சஞ்சய் காந்திக்கு – மிக வேண்டப்பட்டவர், சித்து. அதனால் உள்துறையில் அவரது சேவை அவர்களுக்கு அத்தியாவசியமானதாகப் பட்டிருக்கலாம்.

விரைவில் நான் மீண்டும் மாநில போலீஸ் பிரிவுக்கு மாற்றப்பட்டேன். என் இடத்திற்கு ராஜஸ்தானிலிருந்து ஆர். எல். மிஸ்ரா என்பவர் வந்தார். சித்து, கூடுதல் செயலராக – சீனிவாசவரதன் சீட்டுக்கு - உயர்த்தப்பட்டார்.

இந்த நிகழ்ச்சிகளுக்குப் பின் இரண்டு வருடங்கள் இந்திராகாந்தியுடன் எனக்கு எந்தத் தொடர்பும் இல்லாது போயிற்று.

1977-ல் நான் சி.பி.ஐ. டைரக்டராக இருந்த போது, மறுபடியும் அவரை – இம்முறை மிக நேரடியாக – சந்திக்க வேண்டி வந்தது.

அந்த சந்திப்பின்போதே அவரைக் கைது செய்யவும் வேண்டி இருந்தது!

(அடுத்த வாரம்)



• சந்திரிகா

கொதித்துக் கொண்டிருக்கும் இலங்கைத் தமிழர் விவகாரத்திற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கக்கூடியவிதமாக, அதிபர் சந்திரிகா அறிவித்திருக்கிற சில அதிரடி அதிகாரப் பகிர்வு திட்டங்கள் – யோசனைகள், மிகுந்த கவனத்துக்குரியவை. இ.பி.ஆர்.எல்.எஃப். போன்ற தமிழ்ப் போராளி அமைப்புகள் வரவேற்பு தெரிவித்துள்ள இத்திட்டங்கள் பற்றி, புலிகள் இன்னும் மூச்சு விடாத நிலையில் தமிழக அரசியல் கட்சித் தலைவர்கள் இது பற்றி என்ன நினைக்கிறார்கள்?

"சந்திரிகா அறிவித்துள்ள அதிகாரப் பகிர்வு திட்டம், இனப் பிரச்னையைத் தீர்க்க அடிப்படையாக இருக்கும். ஏப்ரல் 19 அன்று இலங்கை அரசுடன் பேச்சு வார்த்தையை, தன்னிச்சையாக முறித்துக் கொண்டது புலிகள்தாம்! எனவே அவர்கள்தான் மீண்டும் பேச்சு வார்த்தையைத் தொடங்க நடவடிக்கை எடுக்க வேண்டும்!" என்று சங்கரய்யா (மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட்) சொல்லியிருக்கிறார். (நாளிதழ் செய்தி) இது பற்றி மேலும் இரண்டு தமிழகத் தலைவர்களிடம் கருத்து கேட்டோம்.



• பிரபாகரன்

# பிரபாகரன் என்ன செய்ய வேண்டும்?

## "பேசித் தீர்க்க வேண்டும்!"

- குமரி அனந்தன்

தமிழர்கள் அதிகமாக வாழும் வடக்கும் கிழக்கும் இணைக்கப்பட்டு, ஒரே பிராந்தியமாக கூட்டமைப்புக்குள் செயல்படும் என்பது வரவேற்கத்தக்க ஒன்று. சில தமிழ்ப் போராளிக் குழுக்கள் இந்த யோசனைகளை ஆதரித்தாலும், புலிகள் மௌனமாக இருக்கிறார்கள். ராஜீவ் காந்தியைக் கொன்ற குற்றவாளிகள் தண்டிக்கப்பட வேண்டும் என்பது காங்கிரஸின் விருப்பமாக இருக்கும் அதே சமயத்தில் தமிழ் மக்களுக்கு நியாயமாக வாழும் உரிமையும், ஆளும் உரிமையும் வழங்கப்பட வேண்டும் என்பதில் நாங்கள் உறுதியாக நிற்கிறோம். இதை ஏன் சொல்கிறேன் என்றால், ராஜீவை சதிசெய்து கொன்றவர்களைத் தவிர, புலிகள் இயக்கத்தில், ஆர்வம் காரணமாகவோ, அல்லது அச்சத்தின்பாலோ, இல்லையேல் உண்மையான தமிழ் உணர்வின் காரணமாகவோ இருப்பவர்களை கொலையாளிகளுடன் சமமாகக் கருத முடியாது!

இந்த யோசனைகள் பல வகைகளில் 1987-ம் ஆண்டு போடப்பட்ட ராஜீவ் - ஜெயவர்த்தனா ஒப்பந்தத்தின் அடிப்படையில் இருக்கின்றன. ஒரிரு இடங்கள் உன்னிப்பாக பரிசீலிக்கத்தக்கதாக இருப்பதால், இந்தச் சந்தர்ப்பத்

• குமரி அனந்தன்



• நெடுமாறன்






# ஸ்ரீராம் பதில்கள்

இப்போ சில நிறுவனங்கள்ல 24%, 30% வட்டி தர்றதா சொல்றாங்களே. அவங்ககிட்ட பணத்தை டெபாசிட் செய்யலாமா?

– எம். மூர்த்தி, மதுரை.

24%, 30%, 35% வட்டி கொடுக்கிறதா சில நிறுவனங்கள் சொன்னாகூட, அந்த அளவுக்கு அதிகபட்ச வட்டியை தொடர்ந்து அவங்களால கொடுக்க முடியுமாங்கிறத நீங்க யோசிச்சு பாக்கணும். இருபது வருஷத்துக்கு முன்னால அப்படிச் சொன்னவங்கெல்லாம் இப்ப திவாலாகி இருக்கிறதைப் பார்க்க முடியுது. உதாரணமா, வங்காளத்தில் சஞ்சய்தா, தமிழ்நாட்டில் உம்மிடி பேங்க்கர்ஸ், இந்து ஃபைனான்ஸ், ஸஃபிகேஸன், ஜெயசக்தி ஃபைனான்ஸ், கேரளாவில் ஸமரியாஸ், லாபெல்லா, கர்னாடகாவில் மன்ஜோக். அந்த மாதிரி கம்பெனியில டெபாசிட் செஞ்சவங்க பணத்தை பறிகொடுத்துட்டு தவிக்கிறத இப்பவும் நாம பாக்கிறோம். இப்படி எத்தனையோ சொல்லலாம். நீங்க பாடுபட்டு சேர்த்த பணத்தை பாழாக்கிடக் கூடாது. உங்க பணத்துக்கு பாதுகாப்பும், வட்டிக்கு



உத்திரவாதமும் ரொம்ப
முக்கியம். அதனால, உங்க
பணத்துக்கும், வட்டிக்கும் முழு
பாதுகாப்பு கொடுக்கிற
நிறுவனத்தை
தேர்ந்தெடுப்பதுதான் நல்லது.

அப்படி நீங்க தேர்ந்தெடுக்கிற
நிதிநிறுவனம் வலுவான
மூலதன ஆதாரம் கொண்ட
பப்ளிக் லிமிடெட் கம்பெனியா
இருக்கணும். உங்க பணத்தை,
அது முதலீடு செய்யும் தொழில்
நிலையான வருமானம்
பெறக்கூடியதா இருக்கணும்.
அப்போதான், அந்த நிறுவனம்
கொடுக்கிற கடனுதவியை
சுலபமா திரும்பப் பெறமுடியும்.
உங்க பணத்துக்கும் பாதுகாப்பு
கிடைக்கும். இந்த மாதிரி
லாபகரமா இயங்கக் கூடிய
நிதிநிறுவனத்தை
தேர்ந்தெடுக்கிறதுதான்
புத்திசாலித்தனம்.

(அடுத்த இதழில்
தொடரும்)

[illegible] பயன்படுத்தி, புலிகளுடன் [illegible] பேச்சு வார்த்தை நடத்தி தீர்வு காண வேண்டும் என்று காங்கிரஸ் கட்சி விரும்புகிறது. அதே போலப் புலிகள், அனைத்து தமிழ் குழுக்களையும் அணைத்துச் செல்ல வேண்டுமே தவிர, சர்வாதிகாரப் போக்கைக் கடைபிடிக்கக் கூடாது!

தமது யோசனைகள் செயல் வடிவம் பெறுவதற்கு, பெரும்பான்மை சிங்கள மக்களின் ஆதரவைப் பெறும், பெரிய பொறுப்பு சந்திரிகாவுக்கு இருக்கிறது.

## காகிதத் திட்டங்கள்!

**- ப. நெடுமாறன்**

புலிகளை ராணுவரீதியாக ஒன்றும் செய்ய முடியாது என்பதை உணர்ந்த பிறகு சந்திரிகா இந்த யோசனைகளை அறிவித்திருக்கிறார். இவை செயல்வடிவம் பெறாது; வெறும் காகிதத் திட்டங்கள்!

– இந்த யோசனைகள் நாடாளுமன்ற கூட்டுக் குழுவின் ஒப்புதலைப் பெற வேண்டும். ஆனால் அக் குழுவில் ஆளும் கட்சிக்குப் பெரும்பான்மை இல்லை.

– நாடாளுமன்றத்தில் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையுடன் [illegible] நிறைவேற்றப்பட வேண்டும். இங்கேயும் ஆளும் கட்சிக்குப் பெரும்பான்மை கிடையாது.

– தவிர, பொது வாக்கெடுப்பு நடத்தி பெரும்பான்மை மக்கள் ஒப்புக் கொள்ள வேண்டும். பெரும்பான்மை மக்கள் சிங்களவர்கள் ஆயிற்றே!

சில நாட்களுக்கு முன்னர் சந்திரிகா நிலப் பரப்பில் மூன்றில் ஒரு பங்கும், கடற்பரப்பில் மூன்றில் இரண்டு பங்கும் புலிகள் வசம் இருப்பதாகச் சொன்னார். இப்படிப்பட்ட நிலையில் 'யோசனைகளைப் பற்றி புலிகளுடன் பேச மாட்டேன்' என்று அறிவித்திருக்கிறார். பின்னர் யாருடன் பேசி செயல்படுத்துவார்? இதிலிருந்தே சந்திரிகா முழு மனத்தோடு இந்த யோசனைகளை அறிவிக்கவில்லை என்பது புரியவரும்.

"இவ்வளவு அதிகாரங்கள் தந்தும், புலிகள் ஆயுதப் போராட்டத்தைக் கைவிட மறுக்கிறார்கள்" என்று சொல்லி, மேற்கு நாடுகளை ஏமாற்றுவதற்காகவே இந்த யோசனைகளை அறிவித்திருக்கிறார் சந்திரிகா. இந்த யோசனைகளைப் பரிசீலித்தாலே, இதுநாள்வரை தமிழர்கள் எப்படி வஞ்சிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது புரியும்.

சந்திப்பு : **ப்ரியன்**



"உனக்கு ட்ரைவிங் சுதந்தரம் கொடுத்தா இப்படித் தாறுமாறா காரை ஓட்டறியே, எனக்கு பயமாயிருக்கு."

"என்னை மாதிரியே நீங்களும் வளைவு வரும்போதெல்லாம் கண்ணை மூடிக்குங்க. பயம் போயிடும்."




"முல்லைக் கொடிக்குத் தன் தேரை ஈந்த பாரி மன்னன் சரித்திரத்தில் இடம்பெறும் போது, தேசியக் கொடிக்காகத் தன் காரையே தந்திருக்கிற எங்கள் தலைவரும் சரித்திரத்தில் இடம் பெற வேண்டியதுதானே நியாயம்?"





"நமக்கு சுதந்தரம் வாங்கித் தந்த அஹிம்சை கொள்கைதான் எமது தலைவியின் கொள்கை. அதை ஒப்புக் கொள்ளாதவர்களை நாங்கள் என்ன செய்யவும் அஞ்ச மாட்டோம் என்று தெரிவித்துக் கொள்கிறேன்...."









"இன்னிக்கு ஒரு நாளாவது ஜனங்களை சுதந்தரமா விடலாமேன்னு கையைக் கட்டிக்கிட்டு இருந்துட்டேன் சார்."

# சுதந்தரமாகச் சிரியுங்கள்!

குல்லூ



"பொங்கலு பண்டிகை தை மாசத்துல இல்ல வரும்? இப்ப இன்னாத்துக்கு இத்தைப் படைக்கறாங்க?"

# கற்பக விநாயகர் பெனிபிட் பண்ட் லிமிடெட்.



196/28, ஐஸ்வர்யா கமர்சியல் சென்டர்,
திருவெங்கிடசாமி ரோடு – மேற்கு, ஆர். எஸ். புரம்,
கோயமுத்தூர் – 641 002. போன் : 442978

## பிக்சட் டெபாசிட்

| காலம் | 3மாதம் | 6மாதம் | 1 வருடம் | 2 வருடம் | 3 வருடம் |
|---|---|---|---|---|---|
| வட்டி | 15% | 16% | 19% | 20% | 21% |
| வட்டி வழங்கும் காலம் | முதிர்வடையும் போது | | மாதமொரு முறை | | |

● **இரட்டிப்புத் தொகை:**

40 மாதங்களில் உங்களது முதல் இருமடங்காகிறது. சராசரி வட்டி 33.3 %

● **மும்மடங்குத் தொகை:**

60 மாதங்களில் உங்களது முதல் மூன்று மடங்காகிறது. சராசரி வட்டி 38.7 %

● **சுக வாழ்வு திட்டம்**

ஓய்வு பெற்றோர், ஊனமுற்றோர், விதவைகள் ரூ. 11,000.00 டெபாசிட் செய்து மாதம் வட்டியாக ரூ. 200 க்கான காசோலைகள் முன் கூட்டியே பெற்று கொள்ளுங்கள்.

● **அனுபவி திட்டம்:**

உங்கள் முதலீடு ரூ. 5000.00 மட்டுமே. உங்கள் முதலீட்டை மூன்று ஆண்டு முடிந்ததும் திரும்பப் பெறுவீர். பிறகு 18 ஆண்டுகள் கழித்து ரூ.1,00,000.00 பெறுவீர்.

● **கடன் வசதிகள் :**

தங்க நகைகள், வீடு / வீட்டுமனை மற்றும் பங்கு பத்திரங்களின் மீது கடன் கொடுக்கப்படுகிறது.

சேவை அங்கத்தினருடன் மட்டுமே. ரூ.11 செலுத்தி பங்குதாரர் ஆவீர்.

## ரத்தினவினாயகர் சிட் பண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்.

புதிய சீட்டு குரூப்புகள் ஆரம்பம்

தொடங்கப்பட உள்ள புதிய சீட்டு :

| சீட்டு குரூப்பு | சீட்டு தொகை | பரிசு |
|---|---|---|
| 500 x 25 | 12,500 | அறிமுகப்படுத்துவோர் மற்றும் சந்தாதாரர்களுக்கு பரிசு உண்டு |
| 1000 x 25 | 25,000 | |
| 2000 x 25 | 50,000 | |
| 4000 x 25 | 1,00,000 | |

* ஏலமுறை : அதிக பட்சம் தள்ளுபடி தொகை 30% வரைமுறையுடன்.

# நீங்கள் கேட்டவை - தராசு

முதல்வர் ஆட்சிக் கல்யாணம்:
இணைப்பு வந்தது?

● சுந்தர் அழகேசன், சீர்காழி.

*? ஆறாம் வகுப்புப் பாடப் புத்தகத்தில் 'ஜெ' பற்றிய பாடம் ஒன்பதாவது பாடமாக, 81-ஆம் பக்கத்தில் இடம்பெற்றுள்ளதைக் கவனித்தீர்களா...?*

! அந்தப் பாடத்தை ஒன்பதாம் வகுப்புப் பாடப் புத்தகத்தில் சேர்க்காமல் கோட்டை விட்டு விட்டார்களே!

● மா. பழனிசாமி, கோவை.

*? அலுவலகப் பணி காரணமாக குறித்த காலத்தில் வருமான வரிக் கணக்கைக் காட்ட முடியவில்லை என்று இன்பசாகரன் ஐ.ஏ.எஸ். கூறியுள்ளாரே...?*

! வருமான வரிக் கணக்கைக் காட்ட மறந்தே போன மத்திய அமைச்சரும் 'ஒரு ரூபாய் சம்பளம், வருமானமே இல்லை' என்று சொல்லிவிட்டு அடுத்த ஆண்டே பல கோடி வருமானம் காட்டிய ஒரு முதல்வரும் முன்னுதாரணத்துக்கு இருக்க, இன்பசாகரனுக்கு இந்தத் துணிச்சல் கூட இருக்காதா?

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன் கோட்டை.

*? தனது வளர்ப்பு மகனின் திருமணச் செலவுகள் பற்றி உரிய நேரத்தில் உரிய நபரிடம் கணக்கு கொடுப்பதாக ஜெயலலிதா கூறியுள்ளாரே....?*

! அந்த அறிக்கை வெளியானதிலிருந்து, சம்பந்தி சிவாஜிதான் நடுங்கிக் கொண்டிருக்கிறாராம்! நீங்கள் எதற்குக் கவலைப் படுகிறீர்கள்...?



* "காஷ்மீரையா வென்றேன்...?"



* "அழகு இல்லை..."



* ஒரு தடவை சொன்னா...

● டி. கலைவாணி, கரூர்.

*? இலங்கைத் தமிழருக்கு வழங்கப்பட்டிருக்கும் சுயாட்சி அதிகாரம் இலங்கைப் பிரச்னைக்குத் தீர்வாக அமையுமா...?*

! அப்படி அமையப் போவதில்லை என்பதைத்தான் கொழும்புவில் நடந்து வரும் குண்டு வெடிப்புச் சம்பவங்கள் உணர்த்தி வருகின்றன. துணிச்சலுடன் புரட்சிகரமான திட்டத்தை முன்வைத்த சந்திரிகா பாராட்டுக்குரியவர். திட்டத்தை ஏற்கும் மனப்பக்குவம் புலிகளிடத்தில் இல்லாததுதான் சோகம்.

● அ. சுகுமார், காட்டுக்காஞர்.

*? 'ஜெ'யைப் போல் 'கட்அவுட்' வைக்கும் அளவிற்கு காங்கிரஸ் தலைவர்கள் முகம் அழகானது இல்லை என்று இந்திரகுமாரி கூறுகிறாரே...?*

! அ.தி.மு.க.வானாலும் சரி, காங்கிரஸ் ஆனாலும் சரி, ஆட்சியின் அழகல்லவா அளவுகோலாக அமைய வேண்டும்!

● எஸ். மணி, ஆலப்புழை. ❑

*? இதுவரை ஆட்சிக்கு வந்த இந்திய சினிமாக் கலைஞர்களினால் எந்தவித நன்மையும் உண்டாகாத போது, அவர்களே மீண்டும் மீண்டும் அரசியலுக்கு வருவானேன்...?*

! ஏன் நன்மை உண்டாகவில்லை? அப்படி நுழைந்த கலைஞர்களுக்கு எக்கச்சக்க நன்மை தானே... கால்ஷீட் அட்ஜஸ்ட்மென்ட், நேரங்கெட்ட நேரத்தில் ஷூட்டிங், ஆட்டிப் படைக்கும் டைரக்டர் போன்ற எந்தவிதத் தொந்தரவும் இல்லாமல், உட்கார்ந்த இடத்திலிருந்தபடி, அவர்களால் முன்னிலும் அதிகமாகச் சம்பாதிக்க முடிகிறதே!

● பெ. கொ. தி. முருகேசன், கோபி.

*? டான்சி நிலம் தொடர்பாக சைதை கோர்ட், முதல்வருக்கு சம்மன் அனுப்ப உத்தரவிட்டது பற்றி...?*

! அந்த உத்தரவைப் பிறப்பித்த நீதிபதி ஷண்முகத்தின் தைரியம் மட்டுமின்றி ஒரு புதிய கோணத்தில் வாதாடிய வழக்கறிஞர் பாரதியின் திறமையும் (இவர் ஷண்முகசுந்தரம் சார்பில் வாதாடி

யவர்) பாராட்டுக்குரியது. 'ஜெ' டான்ஸி நிலத்தை வாங்குவதில் முதல்வர் என்ற முறையில் செயல்படவில்லை; தனிப்பட்ட முறையில்தான் செயலாற்றியிருக்கிறார் என்பதால் வழக்கு நடத்த ஆளுனரின் அனுமதி தேவையில்லை என்ற வாதத்தை முன்வைத்து அசத்தி விட்டார்!

● கே. என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.

*? தீண்டாமை காரணமாக ஹரிஜன சிறுமியின் கண் பறிக்கப்பட்ட அவலம் குறித்து...?*

! மிகக் கேவலமான நிகழ்ச்சிதான். எனினும்



● பொருத்தமான பாராட்டு!



● துணிச்சல் இருக்காதா?

உரிய நேரத்தில் சிகிச்சை தரப்பட்டு கண் பார்வையைக் காப்பாற்றி விட முடியும் என்பது ஆறுதல். சட்டங்களினால் மட்டுமே சமுதாய நீதியை நிலைநாட்ட முடியாது என்பது மீண்டும் உறுதியாகிறது. சிறந்த கல்வி மூலம் மனவளம் பெருக்கினால் அன்றி இத்தகைய கொடுமைகளை ஒழிக்க முடியாது.

● மு. இரவிச்சந்திரன், சேலம்.

*? அரசியலில் ஆன்மிகம் இருந்தால்தான் நியாயம், நேர்மை, ஒழுக்கம் ஆகியன தழைக்கும் என்று டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி கூறுகிறாரே...?*

! ஆன்மிகம் தழைத்தால் போதாது. அது 'பிரேமானந்தா பிராண்ட்' ஆன்மிகமா அல்லது பரமஹம்சர் பாதையிலான ஆன்மிகமா என்பதைப் பொறுத்தே ஆட்சியின் லட்சணம் அமையும்!

● கீழ்ப்பனையூர் ஜெயா சீனிவாசன், கும்பகோணம் - 2.

*? "எனக்கு பிரும்மாண்டமான வரவேற்பு அளிப்பதை நான் விரும்பவில்லை... நான் என்ன காஷ்மீரையா வெற்றி கண்டு திரும்பி விட்டேன்...?" என்று புது மனைவியுடன் பாக். திரும்பிய இம்ரான்கான் பேசியது பற்றி...?*

! பாகிஸ்தானிய பள்ளி பாடப் புத்தகங்களில் A for apple என்பது போல, E for enemy என்று ஒரு சீக்கியரின் படத்தை இடம்பெறச் செய்திருக்கிறார்கள்.... இத்தகைய பின்னணியில் வெறுப்பும் வெறியும் வளர்வதில் வியப்பு என்ன...?

● கு. கருணாநிதி, சோழன்மாளிகை.

*? "தலையை ஸ்டைலாகக் கோதிக் கொள்பவர்களெல்லாம் தலைவராகி விட முடியாது" என அமைச்சர் சத்தியமூர்த்தி யாரைக் குறிப்பிடுகிறார்...?*

! புரியாத மாதிரி கேட்கறீங்களே! அவர் ஒரு தடவை சொன்னாலே நூறு தடவை சொன்ன மாதிரி புரியணுமே!

● வெ. ஜெயவேல், கோவை - 46.

*? அரசியலில் என் தாத்தாவின் ஒரே வாரிசு ஜெயலலிதாதான் என்று காமராஜரின் பேரன் கூறியிருப்பது பற்றி...?*

! ஏழு லட்சம் வைப்பு நிதியும் மேலும் பல லட்சம் பெறுமானமுள்ள குடியிருப்புகளும் பேச வைக்கின்றன.

● சூர்ய நிலா, சேலம் - 2.

*? கடலூர் நீதிமன்ற வளாகத்திலேயே கைதி களை வெட்டிக் கொலை செய்த சம்பவம் குறித்து...?*

! நீதிமன்றத்துக்கு விசாரணைக்கு அழைத்து வரப்படுவோரும் பொது மக்களும் போதுமான பாதுகாப்புப் பெறுவதற்கான நடவடிக்கைகள் குறித்து அறிக்கை தர ஒரு கமிட்டியை ஏற்படுத்தியிருக்கிறார் சென்னை உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதி. இதனை வரவேற்க வேண்டும். ஆனால், நீதி கிடைக்கும் என்ற நம்பிக்கையும் அது அனாவசிய தாமதங்களின்றிக் கிடைக்கும் என்ற உத்தரவாதமும் மக்களுக்குத் தேவை. அப்போதுதான் இது போல் அவர்களே சட்டத்தைக் கையில் எடுத்துக் கொள்ளும் நிகழ்ச்சிகள் குறையும்.

● டி. பசுபதி, ஊஞ்சவேலாம்பட்டி.

*? எழுத்தாளர் மணவை முஸ்தபாவுக்கு விருது வழங்கப்பட்டுள்ளது பற்றி...?*

! முற்றிலும் பொருத்தமான பாராட்டு. யுனெஸ்கோ நடத்தி வரும் கூரியரின் ஹிந்தி பதிப்பு கைவிடப்பட்டு விட்ட பிறகும் தமிழ்ப் பதிப்பை வெற்றிகரமாக நடத்தி வருகிறார் முஸ்தபா. தவிர, பல நூல்கள் எழுதி கலைச் சொல் ஆக்கத்துக்கு நிறைய உழைத்திருக்கிறார். இந்த விருது அவருக்கு மட்டுமின்றி தமிழுக்கும் கிடைத்த பெருமை.

● ஈ.டி.. விஜயகுமார், ஈரோடு.

*? முதல்வர் வீட்டுத் திருமணத்திற்கு அழைப்பிதழ் கிடைத்ததா...?*

! வெள்ளித் தட்டுடனான அழைப்பிதழ் கிடக்கட்டும்... வெறும் அழைப்பிதழாவது வருமென்று பார்த்தால்... ஹ்ூம்!

---

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
எஸ். மணி,
முல்லைக் கல், தெற்கே மடம்,
ஆலப்புழை, கேரளா.

நிலையான பாதுகாப்பு... நிறைவான வருமானம்...

# திருமகள்

வழங்கும்

# 25% + 5%

வட்டி ஊக்கத் தொகை

**36**
மாதங்களில்
உங்கள் முதலீடு
இருமடங்காகிறது

திருமகள்.. உங்கள் வீட்டுப் பொன்மகள்...



## THIRUMAGAL LEASING & HIRE PURCHASE CORPORATION

H.O.: D-1, Hongkong Complex, 9, Ramanathan Street,
T. Nagar, Madras - 600 017. Ph : 434 7408
Branch : 194, V.V.P. Building, Anna Salai, Thiruvarur, Ph: 22906.

வேலை நேரம் : **10.00 A.M. To 6.30 P.M.**
ஞாயிறு : **10.00 A.M. To 1.00 P.M.**

SPRINGHEAD

ESTD : 1955 ஸ்ரீ Ph : 24823

## தீபாவளி கங்கா ஸ்நானமும் தங்க அன்னபூர்ணா தேவி தரிசனமும் கூடிய 19 நாட்கள் கொண்ட காசி யாத்திரை.




சென்னையிலிருந்து 14.10.95 & 15.10.95ம் தேதிகளில் புறப்பட்டு கல்கத்தா-கயா காசி-அயோத்யா-அலகாபாத்-அரித்வார்-ரிஷிகேஷ்-லக்ஷ்மணஜூலா-டில்லி, ஆக்ரா-மதுரா-சென்னை வந்து சேர்கிறது. இந்த யாத்திரைக்கு இரு தனி 3 டயர் கோச் ரிசர்வ் செய்துள்ளோம். கட்டணம் நபருக்கு ரூ.4875/-, ரூ. 1000 விதம் அட்வான்ஸ் அனுப்பி ரிசர்வ் செய்து கொள்ள வேண்டும்.

ஆண்டுதோறும் நம் இந்திய நாட்டில் உள்ள பல்வேறு மொழிகளையும், கலாச்சாரங்களையும் பழக்க வழக்கங்களையும் கொண்ட மதத்தவர்களால் கொண்டாடப்படுவது தீபாவளி நாளாகும். இந்த திருநாளில் இல்லங்களில் உள்ளவர்கள் அனைவரும் அவரவர் சக்திக்கேற்றபடி கொண்டாடுவது வழக்கமாகும். தீபாவளி திருநாள் அன்று ஆதவன் உதிக்கும் முன்னர் ஸ்நானம் செய்து புத்தாடை அணிந்து இறை வழிபாட்டிற்கு பின்னர் ஒருவரை ஒருவர் சந்திக்கும் போது நமஸ்காரம்! என்ன கங்கா ஸ்நானம் ஆச்சா? என்றுதான் விசாரிப்பார்கள். கங்கா ஸ்நானம் என்பது கிணற்றிலோ அல்லது குழாய் நீரிலோ ஸ்நானம் செய்தாலும் கங்கா ஸ்நானம் ஆச்சது என்றே பதில் வரும். அப்போதே நமக்குத் தோன்றும் எண்ணம் என்ன தெரியுமா? ஈஸ்வரா! என்றைக்காவது ஒருநாள் அந்த காசி கங்கையிலே ஸ்நானம் செய்யும் வாய்ப்பை அடைவோமா என்ற எண்ணம்தான். ஆம்! அந்த எண்ணம் நிறைவேறவே ஏற்பாடு செய்துள்ள யாத்திரை. இத்துடன் பூர்ண சூரிய கிரஹணத்தன்று காசி கங்கா ஸ்நானம்!

---

எமது யாத்திரையில் சித்தூர் தமிழாசிரியர் திரு. P. ஞானசுந்தரம் L. கிருஷ்ணவேனி தம்பதியரும் திரு N. சண்முகசுந்தரம் P. ராதாமணி தம்பதியரும், கோவை, பொன்னையராஜபுரம் - திருமதிகள் M. மைதிலி குடும்பத்தாரும் திருச்சி திரு. P. ராதாகிருஷ்ணன் ராஜலக்ஷ்மி தம்பதியாரும் சேர்ந்துள்ளார்கள்.

விவரத்திற்கு ரூ. 2 ஸ்டாம்ப் அனுப்பி, முழு விவரங்கள் பெறலாம்.

**ஸ்ரீநாமகிரி டிராவெல் சர்வீஸ்,**
34-A/2 அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி - 2.
N. SRIDHAR, N.K. SEKAR, K.E. நம்பிள்ளை



புருஷேஷு ராமா : புஷ்பேஷு ரோஜா, நாரீஷு ரம்பா : நகரேஷு காஞ்சி

# நடராஜ் எஸ்டேட்ஸ்

வழங்கும்

## பண்ணை வீடு - FARM HOUSE

❑ உங்கள் வாராந்திர விடுமுறை நாட்களை - மகிழ்ச்சியுடனும், நிம்மதியுடனும் கழிப்பதற்கு அமைதியான, அழகான சூழ்நிலை

**2 கிரவுண்ட் 4800 ச. அடி ❑ 10 தேக்குமரங்கள்**

❑ 10 தேக்கு மரங்களுடன் தென்னை, மா, பலா, வாழை, காய்கறிகள், பூச்செடிகள் முதலியவற்றுடன் - அழகான சகல வசதிகளுடன் கூடிய காட்டேஜ்

**10 தேக்கு மரங்களின் மதிப்பு 15 ஆண்டுகளில் பல லட்சம் ரூபாய்கள்**

❑ சென்னை - பெங்களூர் நெடுஞ்சாலையில் காஞ்சிபுரத்துக்கு அருகே - பஸ் ரூட்டில் தயாராகிறது. ஏமாற்றத்தைத் தவிர்க்க இன்றே முன் பணம் செலுத்தி பதிவு செய்து கொள்ளுங்கள். மாதத் தவணை ரூ.1000, ரூ.2000, ரூ.5000

மொத்தமாக பணம் செலுத்துபவர்களுக்கு 10% தள்ளுபடி உண்டு. மேலும் விபரங்களுக்கு :

**Phone : 4342098, 4840150**



**NATARAJ ESTATES (Farm House Promoters)**
"Shanthi Complex" 3rd Floor, 26, Ranganathan Street,
T. Nagar, Madras - 600 017. B.O. Kancheepuram.
Tanjore Office : 2-B, Selvam Nagar, T.P.S. Bus Stop,
Medical College Road, Tanjore - 613007.



NATARAJ GROUP OF COMPANIES:
**NATARAJ FINANCE, NATARAJ CHITS (TAMILNADU) PVT. LTD.,
NATARAJ EXPORTS OVERSEAS, NATARAJ OIL MILLS,
NATARAJ PUBLICATIONS.**

# நிறங்களும் நிஜங்களும்



**சா**யங்கால வானம் ஏன் சிவப்பாக இருக்கிறது?

சூரியனின் ஒளிக்கதிர்கள் வானவில்லின் ஏழு நிறங்களையும் கொண்டது. ஒவ்வொரு வண்ணத்துக்கும் ஒருவித குறிப்பிட்ட அலைவரிசை உண்டு. வயலெட் மிகக் குறைந்த அலைவரிசையையும், சிகப்பு மிக நீளமான அலைவரிசையையும் கொண்டது.

சூரியன் மறையும் நேரத்தில் காற்றிலுள்ள பரவலான தூசிகள் சூரியனிலிருந்து வரும் கதிர்களில் சிறிய அலைவரிசையைக் கொண்ட வண்ணங்களை திசை திருப்பி விட்டுவிடுகிறது. சிவப்பு மற்றும் ஆரஞ்சு வண்ணங்கள் நேரடியாக வந்து நம் கண்ணைப் பதித்து கவிஞர்களை உருவாக்குகின்றன.



**சி**லருக்குக் கறுகறு வென்றும், சிலருக்கு ப்ரவுனாகவும் ஏன் தலைமுடி இருக்கிறது தெரியுமா?

நம் தலைமுடியின் வேர்ப்பகுதியில் நிறைய செல்கள் உள்ளன. இவற்றில் 'மெலனின்' என்ற பெயர் கொண்ட 'பிக்மெண்ட்டு'களும் அடக்கம். மற்ற செல்களைப் போல தேமே என்றிருக்காமல் இந்த மெலனின்கள் வேகமாகப் பரவி, மயிர்க்காலிலிருந்து வளரும் பகுதியுடன் சேர்ந்து மேல்புறமாக வளருகின்றன. நாளடைவில் இந்த மெலனின் இறந்து விட்டாலும், அவற்றின் பிக்மெண்டு துகள்கள் தொடர்ந்து முடியில் காணப்படுகின்றன. இந்த பிக்மெண்ட்டுகள் சிவப்பிலிருந்து, ஆழமான ப்ரவுன் நிறம் வரை எந்த வண்ணத்திலும் இருக்கலாம். இந்தப் பிக்மெண்ட்டுகள் அடங்கிய சிறு உறைப்பகுதி, மஞ்சள் வண்ணத்தில் காணப்படுகிறது. இந்தப் பகுதியும் பிக்மெண்ட்டுகளும் கலக்கின்றன. எந்த விகிதத்தில் அவை கலக்கின்றன என்பதைப் பொறுத்தே நம் தலைமுடியின் வண்ணம் அமைகிறது. நம் பரம்பரை 'ஜீன்'களும் இந்தக் கலவையை நிர்ணயிக்க உதவுகின்றன.

**கோ**டையில் பசுமையாக இருக்கும் மரங்கள், இலையுதிர்காலம் வந்ததும் ஏன் பழுப்பாகவும் மஞ்சளாகவும் மாறிவிடுகின்றன?

இலைகளின் பச்சை வண்ணத்துக்குக் காரணம் குளோரோபில். ஆனால் இலையில் இருப்பது குளோரோபில் மட்டுமே அல்ல. ஸாந்தோஃபில் (மஞ்சள் வண்ணம் கொண்டது- இலையில் சுமார் 23% இதுதான்), கரோட்டின் ஒமிட்....! (சிவப்பு - 10%) போன்றவையும்தான். கோடையின் போது குளோரோஃபில் ராஜ்ஜியம் கொடிகட்டிப் பறக்கிறது. ஆனால் பிறகு குளோரோஃபில் கிளைகளுக்கும் மற்ற பாகங்களுக்கும் பரவ வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. புதிதாகவும் (தட்ப வெப்பத்தின் காரணமாக) குளோரோஃபில் உருவாவதில்லை. எனவே மற்றப் பொருள்களின் வண்ணம் வெளித் தெரியத் தொடங்குகிறது.

**சா**தாரணமாக, தீ மஞ்சளாக எரியும். 'காஸ்' அடுப்பு ஜுவாலை மட்டும் ஏன் நீலமாகத் தெரிகிறது?

அடுப்புக் கரி என்பது கார்பன். அது காற்றோடு - ஆக்ஸிஜனோடு கலந்து வெப்பமாகும் போது மஞ்சள் நிற ஜுவாலை வருகிறது. ஆனால் காஸ் சிலிண்டரில் அடைத்துவைக்கப்படுவது வாயு அல்ல; லிக்விட் பெட்ரோலியம் காஸ் என்கிற திரவமே! பெட்ரோலியம் காஸ், எரியும் போது, பச்சை கலந்த நீலமாகத் தான் எரியும். ஆனால் காற்றிலுள்ள ஆக்ஸிஜன் அளவு அதிகமாகவோ, அல்லது 'காஸ்' அளவு குறைவாகவோ இருந்தால் ஜுவாலை மஞ்சளாகும்! ஆக்ஸிஜன் அளவு அதிகரிக்க வாய்ப்பு இல்லை; எனவே 'காஸ்' வரும் பாதையில் அடைப்பு இருந்தால் இது நேரும்! அடைப்புகள் சரிசெய்யப்பட வேண்டும்.

— ஜி.எஸ்.எஸ்.

**காசி பில்டர்ஸ்** வழங்கும்

# காசி குருப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின்

## 50% சிறப்புத் தள்ளுபடி

**காசி குருப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்:** இத்திட்டத்தில் ரூ. 1,500/- முதல் ரூ. 5,000/- வரை மாதத்தவணைகளாகச் செலுத்தி குலுக்கல் மூலம் 300 முதல் 1000 சதுரடிகள் வரை உள்ள வீட்டினை தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை சொந்த வீட்டில் இருந்துகொண்டே வாடகைபோல் செலுத்தலாம். இத்திட்டத்தில் வீடு பதிவு செய்பவர்களுக்கு முதல் தவணைத் தொகையில் 50% சிறப்புத் தள்ளுபடி வழங்கப்படும்.

**சுபமங்களா திட்டம்:** இத்திட்டத்தின் கீழ் தங்களுக்கு பிடித்தமான வீட்டைத் தேர்ந்தெடுத்து ரூ. 10,000/- மட்டுமே அட்வான்ஸாகக் கொடுத்து உடனடியாக உங்கள் பெயரை பதிவு செய்து கொள்ளலாம். பின்பு, ஒரு மாத காலத்திற்குள் வீட்டின் மொத்த தொகையில் 25% மட்டுமே செலுத்த வேண்டும். மீதமுள்ள 75% தொகைக்கு கடன் வழங்கும் நிறுவனமான எல்.ஐ.சி. கேப்பிடல் ஹோம் மூலமாக தங்களுக்கு கடன் உதவி ஏற்பாடு செய்து தருகிறோம்.

ஒரு சதுரடியின் விலை

**500/-**

மட்டுமே

**வீடு கிடைக்கும் இடங்கள்** - சென்னை கே.கே.நகர் மேற்கு, விருகம்பாக்கம், வளசரவாக்கம், போரூர், வடபழனி, சாலிகிராமம், நங்கநல்லூர், கோடம்பாக்கம் (ரங்கராஜபுரம் மெயின்ரோடு), பல்லாவரம் (ரயில் நிலையம் அருகில்) ஆகிய இடங்களில் வீடுகள் பெறலாம்.

**குறிப்பு:** மேலும் "காசி குருப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்"ன் தவணைமுறைத் திட்டத்தின் மூலமாக விரைவில் மதுரை, திருச்சி, கோயம்புத்தூர், பெங்களூர் போன்ற பெருநகரங்களில் வீடுகள் கட்டித் தரப்படும்.

**குறிப்பு** :- வாடிக்கையாளர்கள் எங்களது "காசி குருப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்"ல் உறுப்பினராக சேர விரும்புவோர் கீழ்கண்ட கூப்பனை நாள், நேரம் குறிப்பிட்டு பூர்த்தி செய்து கீழ்கண்ட எங்களது முகவரிக்கு அனுப்பி வைப்பீர்களேயானால் எங்கள் நிறுவனத்தின் பிரதிநிதி தங்களின் இருப்பிடத்திற்கு நேரில் வந்து அனைத்துத் திட்டங்களையும் தங்களுக்குப் புரியும்வண்ணம் எடுத்துரைப்பார்கள். தாங்கள் "காசி குருப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்"ல் சேர விரும்பி அதற்கான தொகையை எங்கள் பிரதிநிதியிடம் பணமாகவோ அல்லது காசோலையாகவோ செலுத்தும் பட்சத்தில் பணம் பெற்றுக் கொண்டதற்கான ரசீது மற்றும் சான்றிதழ்களை தாங்கள் பெற்றுக் கொள்ளலாம்.

மேலும் விவரங்களுக்கு

KGC

**காசி பில்டர்ஸ்** மற்றும்

**காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிட்.**

[illegible] அசோக் நகர், சென்னை - 600 083.

போன் : 4822206, 4821969, 4825506 FAX : 044-4825606

[illegible] சென்னை-15. போன் : 456464

**ஞாயிறு முழு அலுவலகம் உண்டு.**

காசி குருப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின் வெற்றிகரமான 17வது குலுக்கல் வரும் 29.10.95 அன்று நடைபெற உள்ளது.

---

தங்கள் நிறுவனத்தின் "**காசி குருப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்**"ல் உறுப்பினராக சேர விரும்புகிறேன். இது பற்றிய விபரம் அறிந்துகொள்வதற்கு தங்களின் அதிகாரம் பெற்ற பிரதிநிதியை கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.

பெயர் : ..............................................................

முகவரி : ..............................................................

..............................................................

நாள் .............................. நேரம் ..............................

கையொப்பம்

## பா. ராகவன்

# கடலளவு மனசு

**எம்.**ஜி.ஆர். குப்பம் இன்னும் கண் விழிக்கவில்லை. வீதியிலேயே பாய், புடைவை விரித்து ஆண்களும் பெண்களும் கலைந்த ஓவியம் மாதிரி தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

அடைக்கலராஜ், குடிசையை விட்டு வெளியே வந்தான். மணி ஐந்தா? ஐந்தரையா? ஆறு மணி டூட்டிக்கு லேட்டாகி விடக்கூடும்...

அப்போது அது அவன் கண்ணில் பட்டது. கார்ப்பரேஷன் குழாய் அருகே அந்தப் பைத்தியம் தன் நினைவில்லாமல் வானம் பார்த்துப் படுத்திருந்தது.

வெறும் பாவாடை. மிகவும் கிழிந்த, நிறம் போன ரவிக்கை. மேலே புடைவைக்கு பதில் ஒரு சின்னத் துண்டு. அதுவும் விலகி...

பைத்தியங்களுக்கும் யாராவது சாப்பாடு போட்டு விடுகிறார்கள். அதுகளும் நாளெல்லாம் அலைந்து, அலைந்து, உடம்பு உரமேறி...

''ராக, இன்னாடா பண்ற அங்க?'' - செல்வமுத்து.

வாயில் கோபால் பல்பொடியுடன் வந்தவனிடம், "பைத்தியம், செல்வமுத்து! நேத்தி முளுக்க தாலுகா ஆபீஸாண்ட சுத்திக்கினு இருந்திச்சி. எப்ப இங்க வந்து உளுந்திச்சின்னு தெரியல. அதான், எளுப்பி தொரத்தலாம்னுட்டு..."

"பைத்தியமா? என்னா கட்டை! என்னா கட்டை!"

"அ. ஆமா! மேல துணி வெலகினது கூடத் தெரியலை பாரேன்!"

**"எ**ப்போவ்!"

அடைக்கலராஜ் திரும்பிப் பார்த்தான். அவனது ஐந்து வயது மகன். டிராயர் - சட்டை இன்றி, பிறந்த மேனியாகத் தலை சொறிந்து கொண்டு நின்றிருந்தான்.

''ஆத்தா தூங்குது. நீ வந்து களுவி உடு."

"ஓ போடா அப்பால. உங்க ஆத்தாள எளுப்பு."

"யாருப்பா இந்த பொம்பள?"

"போடான்றனில்ல?"

"மாட்டேன்! நீ வா. களுவி வுடு."

"இப்ப நீ ஒத வாங்கப் போற. போடான்றனில்ல?"

**"இ**ன்னாடா காலீல ரவுசு?"

மாசிலாமணி எழுந்து வருவது தெரிந்தது.

"பைத்தியம்ணே!"

''ஐயே, வந்து உளுந்துதே. என் வூட்டாண்ட! தொரத்துங்கடா."

"தூங்குதா? இல்ல, செத்தே பூட்ச்சா?"

அடைக்கலராஜ், இன்னும் முன்னேறி, கூர்ந்து கவனித்தான்.

அவள் சட்டென்று விழித்துக் கொண்டு, எழுந்து உட்கார்ந்தாள். எதையோ நினைத்துக் கொண்டு 'ஈ' என்று சிரித்து, இரண்டு கைகளாலும் தலையைச் சொறிந்தாள்.

"தே... எழுந்து போம்மே!"

"சீ, போ!"

"போன்றனில்ல?"

செல்வமுத்து அடிக்க கை ஓங்கினான்.

"யப்போவ், களுவி வுடு."

அடைக்கலராஜ் திரும்பி, மகனை முறைக்க,

"ஐயே, டௌசரே இல்லியா? ஏழையா? பாவம்!"

சட்டென்று அவள் தன் துண்டை எடுத்து, அடைக்கலராஜிடம் வீசி, "சுத்திவுடு அந்தப் புள்ளைக்கு" என்று சொல்லி, எழுந்து நடக்க ஆரம்பித்தாள்.



## பாலகுமாரன்

பெண்ணை நேசிக்கத் தொடங்கி விட்ட பிறகு, அந்த நேசிப்புக்கு, மிக மெல்லியதாய் அவள் அங்கீகாரம் தந்துவிட்ட பிறகு, ஆணுக்கு ஏற்படும் பரபரப்பு அசாத்தியமானது. மனம் நீர்ப்பறவையிடம் சிக்கிய மீனாய் துடிக்கத் தொடங்கிவிடுகிறது. நிலைக் கண்ணாடி அவனைக் கவ்விக் கொள்கிறது.

அவள் பார்வையில் தான் எப்படி இருப்போம் என்பதை ஒரு ஆணுக்குக் கவிதை சொல்லுமா? கதை வடிவம் காட்டுமா? ஓவியம் உதவுமா? கண்ணாடி தான் காட்டும்! அவனைப் பற்றி அவனுக்கே நிலைக் கண்ணாடி தான் கவிதை சொல்லும். அவன் உடம்பு கருப்பொருள். அவன் உடைகள் வரிவடிவம். ஒருவன் தன்னைக் கண்ணாடியில் பார்த்துக் கொள்வதை விட மிகச்சிறந்த கவிதை ஏதும் உண்டா? அதைவிடப் பொழுது போக்கான அம்சம் உலகில் இல்லை! அதைவிடப் பலன் உள்ள ஒரு செயல் மனிதன் செய்ததே இல்லை. தன்னை நேசிக்கத் தொடங்குவதின் முதல்படி, ஆண் தன்னைக் கண்ணாடியில் பார்த்துக் கொள்வது. தன்னைக் கண்ணாடியில் பார்க்கப் பார்க்க ஆண், பெண் தன்மை கொள்கிறான். பார்க்க விருப்பமில்லாதவர்கள் மூர்க்கர்களாக இருப்பர்.

தான் நேசம் கொள்ளத் தகுந்தவன் என்றும் தன்னை யாரோ நேசிக்கின்றார்கள் என்றும் நினைக்க, ஆண் மலர்ச்சி அடைகிறான். பெண்ணால் மாற்றப்படும் ஆண்தான் பின்னால் கனியமுடியும்.

கதிரேசன் ஜீன்ஸ் பேண்ட்டும், ஜெர்க்கினும் போட்டபடி நிலைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டான். தான் அணிந்திருந்த பவர் ஷூக்கள் தெரிய வேண்டுமென்று ஒரு ஸ்டூலில் ஏறி அழகு பார்த்தான். பல சினிமாக்களில் மலைத் தொடர்களில் பாடல் காட்சிகள் வருகின்றன. அந்தப் பாடல் காட்சிகளில், கதாநாயகர்கள் ஜெர்க்கின் போட்டுத்தான் வருகிறார்கள், ஜீன்ஸ் போட்டுதான் நடக்கிறார்கள். கதிரேசன் ஒரே இடத்தில் நின்று, நடந்து பார்த்தான். தலையைக் கோதிக் கொண்டான். வெளியே வந்தான்.

கடலைப்பருப்பை வெயிலில் பரப்பிக் கொண்டிருந்த சொர்ணலஷ்மி அவனைப் பார்த்ததும் வியப்போடு எழுந்தாள்.

"ஐயோ அப்படியே சரத்குமார் மாதிரி இருக்கீங்க!" பெரிய குரலில் வியந்தாள்.

கதிரேசனுக்கு சந்தோஷமாக இருந்தது.

"வெளிய வர்றியா போலாம்?" சட்டென்று அவளைக் கூப்பிட்டான்.

"எங்க கூப்பிடறீங்க?"

"காபி எஸ்டேட் ஓனர்ஸ் யூனியன் இருக்காம்! அடிவாரம் போகணுமாம்!

"அடிவாரம்? திரும்பிவர பஸ் கிடைக்குமா?"

"கிடைக்காது. எட்டு மணிக்குத்தான் கடைசி பஸ்"

"அய்யோ நான் மாட்டேன்!"

"நாம்ப பஸ்ல போகலை, கார்ல போலாம்!"

"அப்ப திரும்பிடலாமா?"

"திரும்பியே ஆவணும்!"

"ஏன்?"

"வெளிச்சம் வந்த பிறகு நானும் எல்லோரோடயும் ஏலக்காய் பறிக்கப் போறேன்!"

"வேலை கத்துக்கப் போறீங்களா?"

"வேலை எப்படி செய்வாங்கன்னு பார்க்கப் போறேன்."

"நான் உங்ககூட வந்தா, பகவதியக்கா ஏதாவது சொல்லாதா?"

"சொல்லறதுக்கு இன்னாருக்கு!"

"அப்ப நீங்க கேளுங்களேன்!"

"சின்னம்மா நான் அடிவாரம் போறேன். நீங்க வறீங்களா?"

"இன்னா அடிவாரத்தில?" - பகவதி உள்ளிருந்தபடியே கேட்டாள்.

"காபி எஸ்டேட் ஓனர்ஸ் அசோசியேஷன்னு ஒன்னு இருக்கு. அங்க போய் உட்கார்ந்து நாலு பேரோட பேசி, ஏதாவது தெரிஞ்சிட்டு வரலாம்னு பார்க்கிறேன்."

"டக்குன்னு வாய் உட்டுடக் கூடாது கதிரேசா! இன்னா விலைன்னு கேட்டுடக் கூடாது! ரொம்ப நல்லா இருக்கே எஸ்டேட்டுனு பாராட்டக்கூடாது! 'என்கிட்ட மிதமிஞ்சி காக



இருக்கு. அந்த காசை குப்பைல போடறதுக்கு பதிலா காபி எஸ்டேட்ல போடறேன்' அப்படின்ற மாதிரி பேசணும். எந்த வாக்கும் கொடுத்துடக் கூடாது!"

"கொடுக்க மாட்டேன் சின்னம்மா."

"யார் ஓனரோ, அவங்க கிட்ட தான் பேசணும்! அவரு ஓனரான்னு தெரிஞ்சிக்கிட்டுத்தான் பேசணும்! பேசிப் பழகு. அது நல்லது. ஆனா ஆர்வம் காட்டாதே!"

"நீங்களும் வாங்களேன்!"

"நானா! அது நல்லாருக்காது."

"ஏன் சின்னம்மா?"

"எனக்கு நிறைய பேரைத் தெரியும். எல்லோரும் துக்கம் விசாரிப்பாங்க. பிறகு, எஸ்டேட்டை வச்சருக்கியா, விக்கிறியான்னுவாங்க... பையனுக்கு விவரம் தெரியுமான்னுவாங்க. ஒரே பதில நூறு தடவை சொல்லி நாக்கு உலர்ந்திடும். புருஷன் இல்லாத பொம்பளைன்னா நிறைய பேருக்கு இரக்கம் பொத்துக்கும். உன்னை 'எதுக்கு அனுப்பறேன் தெரியுமா? எஸ்டேட்டை கவனிச்சுக்க எம் புள்ளை வந்துட்டான்னு மலையிலருக்குற எல்லாருக்கும் தெரியணும். செட்டியார் வீடு எனக்கு அறுந்து போயிடலைன்னு வர்றவன் போறவன் எல்லாம் தெரிஞ்சுக்கணும்."

"அப்போ என்னை மட்டும் தனியா போகச் சொல்றியா?"

"வினாயகத்தைக் கூட்டினு போயேன்! ம்... வாணாம், அவன் வாணாம்..."

பகவதி தீவிரமாக யோசித்தாள். அவனை அடக்காத ஆட்களை அவனோடு அனுப்ப வேண்டும் என்று நினைத்தாள். அதே நேரம் அவன் அடிவாரத்தில் என்ன பேசினான் என்று தெரிந்து கொள்ள ஆசைப்பட்டாள். தானே போகலாமா? இப்படிப் போவது தவறாகுமா? யாரை அனுப்புவது?

"சொர்ணலஷ்மியை கூட்டிட்டுப் போயேன்!" யோசிப்பு எடைபோடுமுன் வார்த்தைகள் விழுந்து விட்டன.

"சொர்ணலஷ்மி வா போலாம்."

அவன் சட்டென்று திரும்பி கார் நோக்கி நடந்தான். அந்த கம்பீர நடையை பகவதி பாசத்துடன் பார்த்தாள். 'கடவுளே, இந்த நடை மலை முழுக்கப் பரவணுமே!' என்று வேண்டினாள். சட்டென்று திரும்பி சொர்ணலஷ்மி துள்ளி குதித்து ஓடுவதைப் பார்த்தாள்.

# நீயல்லவோ

பெண்ணால் சந்தோஷத்தை அடக்க முடியாது. சொர்ணலஷ்மி

# கோகுலம்

கையில் இருந்தால் பெருமை!
படிக்கப் படிக்க அருமை!

செப்டம்பர் இதழில்

- சிங்கம் ராஜா தானா?



- தண்ணீரில் போடாதே!
  - பரிசுக்கதை
- மரகதச்சிலை - 4
- புவனா தேடிய புதையல்
  - தொடர்கதையில் புதிய திருப்பம்

இன்னும் எத்தனை எத்தனையோ!

ஐந்தே ரூபாய்க்கு 96 பக்கங்கள்!

பெற்றோரே கோகுலம் வாங்குங்கள்!
பிள்ளைகள் மகிழ்வதைக் காணுங்கள்!

கோகுலம், ஈக்காடுதாங்கல், சென்னை-97


யால் அடக்க முடியாதது அவள் நடையில் தெரிந்தது.

மீண்டும் பகவதி அவளைக் கூர்ந்து பார்த்தாள். சொர்ணலஷ்மி காருக்குள் ஏறுவதில் ஒரு கர்வம் தெரிந்தது. கதவை அடித்து மூடியதில் ஒரு ஆத்திரம் தெரிந்தது. சாய்ந்து உட்கார்ந்ததில் ஒரு அலட்டல் தெரிந்தது.

"ரொம்ப கெட்டிக்காரர்ப்பா, நீங்க! எம் பேரை நீங்க சொல்லாது, அக்காவை சொல்ல வைச்சுட்டீங்களே!" சொர்ணலஷ்மி உரிமையோடு கதிரேசன் முதுகில் தட்டினாள்.

அந்தத் தட்டுதலை பகவதி பார்த்தாள். துணுக்குற்றாள். தப்பு செய்துட்டமோ என்று கலங்கினாள்.

முதன் முதலில் காபி எஸ்டேட் பற்றி விவரம் கேட்கப் போகும் ஒரு இளைஞனை, கைத் தட்டி திருப்பி அழைக்க அவளுக்கு மனம் வரவில்லை. அது அபசகுனம் என்று நினைத்தாள். எதிரே கடையில் ஏலக்காய் நாற்றுகள் அடுக்கி வைத்துக் கொண்டு பத்து பனிரெண்டு பெண்கள் உள்ளே நுழைந்தார்கள். நாற்றங்கால் எதிர்ப் படுவது சுபசகுனம் அல்லவா! இது வளர்ச்சி அல்லவா!

கதிரேசன் வளரட்டும், என் வயிற்றில் பிறக்காத இந்த மகன் பெரும் மரமாய் தரை ஊன்றி நிற்கட்டும். பலருக்கு நிழல் தருகின்ற பயனை வழங்கட்டும். அவளையும் அறியாமல் அவள் குலவையிட்டாள். நாற்று தூக்கி வந்த பெண்கள் அவள் குலவையைக் காதில் வாங்கி அவர்களும் குலவையிட்டார்கள்.

"என்ன குலவை போடறாங்க?" ஓடுகின்ற வண்டியிலிருந்து சொர்ணலஷ்மி ஆவலுடன் திரும்பிப் பார்த்தாள்.

"நாம போற காரியம் நல்லபடியா முடியணும்னு குலவை போடறாங்க" கதிரேசன் வண்டியை வளைத்து, சரிவில் ஓட்டினான்.

"நாம் இப்ப போய் காபி எஸ்டேட் வாங்கப் போறமா?" அவள் ஆவலோடு கேட்டாள்.

"ஏதோ ஒண்ணு வாங்கப் போறோம், ஏதோ ஒண்ணு விக்கப் போறேம்."

அவன் அலட்சியத்தோடு பதில் சொன்னான்.

அவன் தன்னை விற்று அவளை வாங்கப் போகிறான் என்று இருவருமே அறிந்திருக்கவில்லை.

கிருஷ்ணமூர்த்தி அய்யருக்கு வலது கண் துடித்தது. வலது புறத்தின் பின் பக்கம் ஒரு அதிர்வு ஏற்பட்டு அந்தக் கையின் மோதிர விரலில் முடிந்தது.

கடவுளே இது நல்ல சகுனம். யாரோ நல்லவர்கள் நினைத்துக் கொள்கிறார்கள். அவர்

நிமிர்ந்து பிள்ளையாரைப் பார்த்தார்.

"நான் பட்டது போதும்னு தோணலியா? என் பொண்டாட்டியும், குழந்தைகளும் துடிச்சிட்டுருக்கிறது தெரியலியா? இப்படி ஒரு வனாந்தரத்தில் உட்டுட்டியேப்பா! என்னை ஜெயிலுக்கு அனுப்பறதுக்கு பதிலா காபி எஸ்டேட்டுக்கு அனுப்பிச்சுட்டியா? ஒரு நாளைக்கு நானூறு பேர் குட்மார்னிங் சொல்ற வேலையிலிருந்து புடுங்கி இங்கப் போட்டுட்டியே! இது போறாதா! யார் குடியைக் கெடுத்தேன்? எந்த ஜோடியைப் பிரித்தேன்? எனக்கேன் இப்படி ஒரு ரேஸ் ஆடற புத்தி? காசு திருடின குணம். தப்பு பகவானே, தப்பு! இனி மனசாலயும் நான் யாருக்கும் துரோகம் பண்ண மாட்டேன். எனக்கு என் குழந்தைகளைப் பாக்கணும். என் பொண்டாட்டி மடியில படுத்துண்டு அழணும். கேழ்வரகுக் கஞ்சியானாலும் உழைச்சு சம்பாதிச்சு உட்கார்ந்து சாப்பிடணும்.

இன்னும் முப்பது நாள்ள என்னை என் வீட்டில சேர்த்துடு. வெறும் கையனா, மொட்டைத் தலையனா நிக்க வைக்காத. ஏதோ வீட்டுக்கு எடுத்துட்டுப் போற ஆளா, அப்பா சம்பா திச்சுண்டு வந்தார்னு சந்தோஷப்படற விதமா அனுப்பு.

பிள்ளையாரே! நீ கல்லு இல்லை. என் மனசு. என்னைக் காப்பாத்து! என்னை என் வீட்டில கொண்டு போய்ச் சேரும். வீடுதான் சொர்க்கம், வீடுதான் விடுதலை.

*பஞ்சமும் நோயும் நின் மெய்யடியார்க்கோ?*
*பாரினில் மேன்மைகள் வேறினியார்க்கோ?*
*தஞ்சம் அடைந்த பின் கைவிடலாமோ?*
*தாயும் தன் குழந்தையைத் தள்ளிடப் போமோ?*

கிருஷ்ணமூர்த்தி அய்யர் வாய் விட்டுப் பாடினார். மனம் விட்டு அழுதார். தனிமை கொடுத்த தைரியத்தில் குழந்தை போல் தேம்பினார்.

உண்மையான அழுகை என்பது ஒருமுகப்பட்ட பிரார்த்தனை. உண்மையில் கரைந்து உருகியவர்களுக்கு ஒருமுகப்படுவது எளிதாய் வரும். மனசு ஒருமுகப்பட, தன்னிலும் மேலானது தெரியும். தன்னிலும் மேலானது தெரிய, தான் என்கிற கர்வம் அழியும். தான் என்கிற கர்வம் அழிய, சுகம், சந்தோஷம், சௌகர்யம்.

தேம்பிய மனசு தெளிவான போது வாசல் பக்கம், கதவு அசைவது கேட்டது. ஜெர்க்கின் அணிந்த ஒரு இளைஞன் கதவு திறக்க முயற்சி செய்து கொண்டிருந்தான்.

"என்ன வேணும்?"

கிருஷ்ணமூர்த்தி சகலமும் மறந்துவிட்டு கம்பீரமாய்க் கேட்டார்.

"வண்டி சூடாயிடுச்சுங்க, ஒரு வாளி தண்ணி கொடுக்கிறீங்களா?"

"வண்டியை உள்ள கொண்டாந்துருங்க" கிருஷ்ணமூர்த்தி கதவு கொக்கியை நீக்கி திறந்துவிட்டார். வண்டிக்குள் இருந்த பெண் பிள்ளை அவரைப் பார்த்துத் தெளிவாய்ச் சிரித்தாள்.

அட, அம்பி பொண்டாட்டியோட வந்திருக்கானோ...

"வாப்பா, தண்ணி என்ன, ஏ கிளாஸ் காப்பி போட்டுத் தரேன், சாப்பிடு."

அவருக்கு யாரிடமாவது அன்போடு பேச வேண்டும், உபசரிக்க வேண்டும் என்கிற ஆவல் எழுந்தது. அந்தக் கார் உஷ்ணத்தோடு உள்ளே நுழைந்தது.

(தொடரும்...)



"ஏண்டா! நேத்து கரண்ட் இல்லாம உன் ரூம்ல விளக்கே எரியலே; ராத்திரி பூராக் கண் முழிச்சு படிச்சேன்னு சொல்றியே!"

"படிக்கிற இண்ட்ரஸ்ட்ல நான் அதெல்லாம் ஒண்ணும் கவனிக்கலேப்பா!"

— ஏ. கோவிந்தன்



"எலும்பு முறிவு சிகிச்சைப் பிரிவில் புதுசா அட்மிட் ஆகியிருக்கிற பத்துப் பேர் யார் டாக்டர்?"

"ஒயின் ஷாப் ஏலம் எடுப்பதில் ஆளுங்கட்சி எம்.எல்.ஏ.வுடன் போட்டி போட்டவர்கள்!"

— உ. ராஜாஜி

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் இரண்டாம் பரிசு பெறும் இரண்டாவது சிறுகதை.**

வெற்றிலைக் கொடிக்காலுக்குச் சால் அமைத்துத் தண்ணீர் பாய்ச்சிக் கடுமையாக வேலை செய்ததால் மூட்டுக்கு மூட்டு வலித்தது. சுவரில் முட்டுக் கொடுத்துச் சாய்ந்து ஓய்வு எடுக்க வேண்டும்போல முதுகுத் தண்டைக் குடைந்தது. கையில் கொண்டு வந்திருந்த அகத்திக்கீரைக்கற்றையை வீட்டுக்குள் வீசிவிட்டுத் தோளில் கிடந்த துண்டால் தூசி தட்டித் திண்ணையில் அமர்ந்தார் உசேன்பாய்.

ஈச்சம்பாய் முடைவதில் கவனமாக இருந்த அலிமா, அகத்திக்கீரைக் கற்றை வந்து விழுந்த சந்தடியில் தன் கணவர் உசேன் பாயின் வருகையைப் புரிந்து கொண்டு துப்பட்டாவை இழுத்துச் சரி செய்து கொண்டு வெளியில் வந்தாள். உசேன்பாய் கண்களை மூடியபடி தூணில் சாய்ந்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார்.

"சாயா போட்டுக் கொண்டு வரட்டுங்களா?"

அலிமாவின் குரல் கேட்டுக் கண்ணைத் திறந்த உசேன்பாய், "கொஞ்ச நேரம் போவட்டும்" என்று



கூறிவிட்டு முதுகைச் சற்று நிலைமாற்றிச் சாய்த்துக் கொண்டார்.

"வெல்ல மண்டி செல்லக்கண்ணு அய்யா வந்துட்டுப் போனாரு. அடுத்த மாதம் நூறு கருணை ஈச்சம் பாய் தேவைப்படுமாம். பழைய பாக்கி ஐந்நூறு ரூபா கொடுத்துட்டுப் போனாரு.'"

இடுப்பில் சொருகி இருந்த கருக்குப் பையி லிருந்து ரூபாய் நோட்டுகளை எடுத்து அலிமா நீட்டினாள்.

ரூபாய் நோட்டுகளைக் கையில் வாங்கிக் கொண்டு யோசனையுடன் அலிமாவைப் பார்த்தார் உசேன்பாய்.

"என்னை எதிர்பாக்காதீங்க. நீங்க மட்டும் போய்க் காணிக்கையைச் செலுத் திட்டு வந்துடுங்க!"- அவர் பார்வையின் அர்த் தத்தைப் புரிந்து கொண்டு பதில் சொன்னாள் அலிமா.

"பதினைந்து வருஷமா ஏதோ ஒரு காரணத் தால தட்டிக்கிட்டே போயிடுச்சி. இந்த வருஷ மும் அப்படின்னா... நாம ரெண்டு பேருமா சேர்ந்து வந்து காணிக்கைச் செலுத்தறோம்னு நேந்துக்கிட்டதுக்கு என்ன அர்த்தம்?"

"நாகூர் தர்காவைத் தரிசிக்கணும்.... கொடி யேத்தம், சந்தனக்கூடுல கலந்துக்கணும்னு எனக்கும் ரொம்ப நாளா ஆசைதான். ஆனா... என்னால முடியலீங்க. இந்த உடம்பு பஸ் பயணம் தாங்குமான்னு தெரியலை. மூட்டுக்கு மூட்டு பயங்கர நோவு. அதுக்காக இத்தனை வருஷமா நீங்களும் போகாம இருக்கறது சரி யில்லை. இந்த வருஷம் நீங்க மட்டும் போய் நாகூர் தர்கா உண்டியல்ல காணிக்கையைச் செலுத்திட்டு வந்துடுங்க. அடுத்த வருஷம் நாம சேர்ந்து போவோம்"- அலிமாவின் வார்த்தை களில் கலக்கம் இருந்தது.

அதற்குமேல் வாதிட மனமில்லாமல் சமா தானப்பட்டுப்போன உசேன்பாய், தன் பீவியை இரக்கத்துடன் பார்த்தார்.

"கொடிக்காலுக்கு நாலு நாள் லீவு சொல் லிட்டு நாளைக்கே கிளம்புங்க!"- இந்த வருட மும் தட்டிப் போய்விடக் கூடாது என்பதற் காகத் துரிதப்படுத்தினாள் அலிமா.

அலிமாவின் மனதைப் புரிந்து கொண்ட உசேன்பாய், துண்டை உதறித் தோளில் போட் டுக் கொண்டு லீவு சொல்லப் புறப்பட்டார்.



# நாகூர் பயணம்

ப. முருகேசன்

வங்கியின் வாடிக்கையாளர்கள் உட்பட அனைவரும் உசேன்பாயை விநோதமாகப் பார்த்தார்கள். வங்கி குமாஸ்தாவோடு அவர் விவாதித்த விஷயம் அனைவருக்கும் வேடிக் கையாக இருந்தது. குமாஸ்தா எவ்வளவு

அலிமா.

அலிமாவிடமிருந்து இப்படி ஒரு சொல்லை உசேன்பாய் எதிர்பார்க்க வில்லை. அதிர்ச்சி யுடன் அவளைப் பார்த் தார்.

"உடம்பு இருக்கற நிலைமையில முடியாதுங்க. காலை நீட்டினா மடக்க முடியல. கஷ்டப்பட வேண்டி இருக்கு. ரொம்ப தூரம் பஸ்ல பயணம் பண்ண முடி யாது. நீங்க மட்டும் போய்ட்டு வந்துடுங்க!"-



"மாசக் கடைசின்னா, அதுக்காக இப்படியா!"
"ஏன்?"
"ஸ்கூட்டர்ல 'பெல்' இல்லைன்னு போலீஸ்காரர் பிடிச்சிட்டார்!"

— ஆர். வசந்தகுமார்

எடுத்துச் சொல்லியும் அவர் சமாதானமடைவதாக இல்லை.

"நான் என் கணக்குல அப்பப்போ போட்டத் தொகை மொத்தம் ஆயிரம்தான். இப்போது ஆயிரத்து இருநூறு இருக்குதுன்னா எப்படி?" என்ற அவரின் கேள்வி, வெகுளித்தனமானதா, விதண்டாவாதமானதா எனப் புரியாமல் விளக்கம் கூறிக் கொண்டிருந்தார் குமாஸ்தா.

"நீங்க அப்பப்போ போட்ட தொகைக்குக் கிடைச்ச வட்டிதான் அந்த அதிகப்படி இருநூறு ரூபாய்!" என்று திரும்பத் திரும்பக் கூறினார் குமாஸ்தா.

'வட்டி' என்ற சொல்லை அடிக்கடி அவர் பயன்படுத்திப் பேசியதால் உசேன்பாய் எரிச்சல் அடைந்தார்.

"நான் ஒரு முஸ்லீம்னு தெரிஞ்சும் என் கணக்குல எப்படி வட்டி சேர்த்தீங்க!" என்று ஆக்ரோஷமாகக் கத்தினார்.

இப்போதுதான் அவருடைய கேள்வியின் அர்த்தம் ஒரு சிலருக்குப் புரிய ஆரம்பித்தது.

"ஒரு நாளைக்கு ஐந்துவேளை தொழக் கூடிய ஒரு உண்மையான முஸ்லீம் செய்யற காரியமா இது? இரக்கச் சிந்தனை உள்ளவன் எவனும் கை நீட்டி வட்டி வாங்க மாட்டானே! அப்படி வாங்கறது பாவம் இல்லையா? கையில இருந்தா செலவாயிடும்னு பாதுகாப்பு கருதித்தானே பேங்கல போட்டேன். வட்டிக்காகவா போட்டேன்? முதல்ல என் கணக்குல சேர்த்திருக்கற வட்டியைக் கழிங்க!" உசேன்பாய் ஆவேசப்பட்டார்.

அவருடைய கோபம் இப்போது வேடிக்கையாக இல்லை. ஒரு வகையில் அர்த்தமுள்ளதாக இருந்தது. இந்தக் காலத்திலும் இப்படி ஒரு மனிதரா என வியக்க வைத்தது. இருந்தாலும் இது நடைமுறைச் சாத்தியமில்லாத விஷயம் என்பதை குமாஸ்தா அவருக்கு எடுத்துச் சொல்வதிலேயே முனைப்பாக இருந்தார். ஆனால் உசேன்பாய் விட்டுக் கொடுப்பதாக இல்லை.

"தங்கத்தைத் தங்கத்திற்குப் பதிலாகவும், வெள்ளியை வெள்ளிக்குப் பதிலாகவும், மணிக் கோதுமையை மணிக்கோதுமைக்குப் பதிலாகவும், தொலிக் கோதுமையைத் தொலிக் கோதுமைக்குப் பதிலாகவும், பேரீத்தம் பழத்தைப் பேரீத்தம் பழத்திற்குப் பதிலாகவும், உப்பை உப்பிற்குப் பதிலாகவும் சம எடையில் விற்றுக் கொள்ளுங்கள் என்றுதான் இஸ்லாம் போதிக்கிறது. ஒரு பொருளைக் கொடுத்து மீண்டும் அதே பொருளை ஈடாகப் பெறும் நிலை ஏற்பட்டால் சம எடையில்தான் பெற வேண்டும். துளியேனும் அதிகமாகப் பெற்றால் அது பாவமென்னும் வட்டியாகும். அதனால் நான் போட்ட ஆயிரம் ரூபாயை மட்டும் திருப்பிக் கொடுத்துடுங்க!" என்று நீண்ட விளக்கமளித்துத் தன் கொள்கையில் உறுதியாக நின்றார்.

உசேன் பாயின் மனநிலையைப் புரிந்து கொண்ட குமாஸ்தா, சிறிதுநேர யோசனைக்குப் பிறகு, இருந்த ஒரே ஒரு வழியை எடுத்துக் கூறினார்.

"உங்க கணக்குல இருக்கற வட்டித் தொகையை நீங்க கை நீட்டி வாங்க வேணாம். ஏழை எளிய மக்களுக்குப் போய்ச் சேர்ற மாதிரி ஏதாவது ஒரு தொண்டு நிறுவனத்துக்குப் பயன்படுத்திக் கொள்ள அனுமதி அளித்து உங்க கைப்பட ஒரு கடிதம் எழுதிக் கொடுங்க! ஆக வேண்டியதை நாங்க பாத்துக்கறோம். இதைத் தவிர வேறு வழி இருக்கறதா தெரியல."

குமாஸ்தா கூறிய உபாயம் பிரச்னைக்கு ஒரு முற்றுப் புள்ளி வைப்பதுபோல் இருக்கவே அவர் கூறியது போல் ஒரு கடிதத்தை எழுதிக் கொடுத்து விட்டு ஆயிரம் ரூபாயைப் பெற்றுக் கொண்டு வீடு திரும்பினார் உசேன்பாய்.

பகல் ஒரு மணி அளவில் நாகைப்பட்டினம் செல்லும் பேருந்து, புவனகிரி பேருந்து நிலையத்தில் நின்றது. எஞ்சினை நிறுத்தாமலேயே எந்த நிமிடமும் புறப்படத் தயாராக இருந்தார் டிரைவர். பேருந்தில் ஏறுவோரும் இறங்குவோரும் பலப்பரீட்சை செய்து கொண்டிருந்தனர். பேருந்தின் நடுப்பகுதியில் மூன்றுபேர் இருக்கையின் நடுவில் அமர்ந்திருந்த உசேன்பாய் அப்பொழுதுதான் கண் விழித்து "இது எந்த ஊரு?" என விசாரித்துக் கொண்டிருந்தார்.

"புவனகிரி."

பக்கத்தில் அமர்ந்திருந்தவரிடமிருந்து பதில் வந்தது.

உசேன் பாயின் தடிமனான உடம்பால் புழுக்கத்தைத் தாங்க முடியவில்லை. நெளிய ஆரம்பித்தார். மூச்சு விடக்கூட காற்றுச் சரி

# 48 ஆண்டுகளாக

உங்கள் பத்திரங்களைப் பாதுகாக்க
எங்கள் சேவல் மார்க் ஃபைல்கள்
பயன்பட்டு வருவதுபோல
உங்கள் சேமிப்புகளை பாதுகாக்க
எங்கள் டெபாசிட் திட்டம்...

கணக்கிடப்படும்
வட்டி விகிதம் – ஓராண்டுக்கு

**24%**

| மாதங்கள் | ரூ.1000க்கு முதிர்வுத் தொகை | வருடாந்திர வட்டி விகிதம் |
|---|---|---|
| 12 | ரூ. 1260 | 26% |
| 24 | ரூ. 1587 | 29.35% |
| 36 | ரூ. 2000 | 33.33% |
| 48 | ரூ. 2520 | 38% |
| 60 | ரூ. 3175 | 43.5% |

குறைந்தபட்ச டெபாசிட் ரூ.1000




**MUTHUVEL INDUSTRIES**

**Mfrs. of COCK BRAND OFFICE FILES**
**Angappa Chettiar Industrial Complex,**
20-A, Round Road, Post Box No. 32,
DINDIGUL - 624 001. TAMILNADU.
Ph: Off: (0451) 25260 & 27637, Res: 25643 & 23726
Grams: COCKFILE

*உங்கள் முன்னேற்றமே எங்கள் வளர்ச்சி*

ADWAVE/MI/5016

யாக வரவில்லை. பற்றாக் குறைக்கு 'திபுதிபு' வென்று ஏறிய கூட்டம் மதில் சுவர் போல் அடைத்துக் கொண்டு நின்றது. நாக்கு வறண்டு போக, தண்ணீர் குடிக்க வேண்டும்போல் இருந்தது உசேன்பாய்க்கு. அந்த நேரம் பார்த்து "ஒரு ரூபா... ஒரு ரூபா...!" என்று குரல் கொடுத்த படி வெள்ளரிப்பிஞ்சுகளைச் சன்னல் வழியே பேருந்துக்குள் நீட்டினார் முதியவர் ஒருவர்.

தாகத்தைத் தணிக்கவும் பசி வேளைக்குப் பசியை அடக்கவும் உகந்தது என நினைத்து எழுந்து, ஒரு கையில் வெள்ளரிப் பிஞ்சை வாங்கிக் கொண்டு, காசுக்காக மறு கையை ஜிப்பா பைக்குள் விட்டார் உசேன்பாய். அந்த நேரம் பார்த்துப் பேருந்து 'விசுக்' கென்று புறப் பட்டது.

உசேன்பாய் சற்றும் இதை எதிர்பார்க்க வில்லை. அவசரமும் படபடப்பும் அவரைப் பற்றிக் கொள்ள, ஜிப்பா பைக்குள்ளிருந்து கையை அவசர அவசரமாக உருவினார். அவரின் போறாத காலமோ என்னமோ- மெல்லிய மல் துணியில் தைக்கப்பட்ட ஜிப்பா பைக்குள் கை சிக்கிக் கொண்டு வெளியே வர மறுத்து அடம்பிடித்தது. சிக்கிய கையை உதறியபடியே வெள்ளரிப்பிஞ்சு விற்ற முதிய வரைத் தேடி, தலையை அப்படியும் இப்படியு மாகப் பேருந்துக்கு வெளியே நீட்ட முயற்சித் துக் கொண்டிருக்கும்போதே நிலையத்தை விட்டுப் பேருந்து நெடுந்தூரம் வந்து விட்டது.

தோல்வியுடன் இருக்கையில் அமர்ந்த உசேன் பாயால் நிம்மதியாகப் பயணத்தைத் தொடர முடியவில்லை. காசைக் கொடுத்து விட்டு வெள்ளரிப் பிஞ்சைக் கை நீட்டி வாங்கி இருக்கலாமே என்று தன் முட்டாள் தனத்தை நினைத்து வேதனைப்பட்டார். 'இதுவரையில் ஒரு சல்லிக் காசு கூட கடன் வாங்காத நான், முன்பின் தெரியாத முதியவரிடம் ஒரு ரூபாய் கடன் பட்டு விட்டேனே! இதை எப்படி அடைக்கப் போகிறேன்? இனி அந்த முதிய வரை எப்போது சந்திக்கப் போகிறேன்?' எனப் பலவாறாகப் புலம்பி, இருப்பு கொள்ளாமல் தவித்தார்.

அதற்குமேல் பயணத்தைத் தொடர மன மில்லாமல் நடுவழியிலேயே இறங்கி புவனகிரி பேருந்து நிலையத்தை நோக்கி நடந்தார்.

கடுமையான வெயிலைக் கூடப் பொருட் படுத்தாமல் முக்கால் மணிநேரம் நடந்து புவன கிரி பேருந்து நிலையத்தை அடைந்ததும் அவர் கண்கள் முதியவரைத் தேடின. ஆனால் அவரைக் காணவில்லை. உசேன்பாய் அங்கும் இங்குமாக ஓடி அலைந்து தேடினார். முதி யவர் கண்ணில் படவே இல்லை. ஒரு வேளை மதிய உணவிற்காக வீட்டிற்குச் சென்றிருப் பாரோ என்ற நினைப்பில் பக்கத்தில் பலாச் சுளை விற்றுக் கொண்டிருந்த மூதாட்டியை அணுகி விசாரித்தார்.

"வெள்ளரிப்பிஞ்சு விற்ற முதியவர்..." என்று உசேன்பாய் ஆரம்பித்ததுதான் தாமதம், வாயி லும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு புலம் பத் தொடங்கினாள் அந்த மூதாட்டி.

"நாகைப்பட்டிணம் போற பஸ்ல எவனோ ஒரு பாவி வெள்ளரிப்பிஞ்சு வாங்கி இருக் கான். அவன்கிட்ட காசு வாங்கறதுக்குள்ள பஸ் கிளம்பிட்டுது. கிழவரு பஸ் பின்னாடியே ஓடினப்போ எதிர்ல வந்த லாரிக்காரன் அடிச் சுப் போட்டுட்டுப் போய்ட்டான். குத்துயிரும் குலை உயிருமா சிதம்பரம் தர்ம ஆஸ்பத்திரிக் குத் தூக்கிகிட்டுப் போயிருக்காங்க!"

மூதாட்டி கூறியதைக் கேட்டதும் உசேன் பாயின் சப்தநாடிகளும் ஒடுங்கிப் போயின. "யா அல்லாஹ்!... இப்படியும் ஒரு சோத னையா?" என நொந்தபடி செய்வதறியாது அங்கேயே தவிப்புடன் நின்றார். பிறகு, இத் தனையும் விவேகமற்ற தன் மடமையால் விளைந்தவை. காசைக் கொடுத்துவிட்டுப் பொருளை வாங்கியிருந்தால் ஒரு உயிரை விலையாகக் கொடுத்திருக்க வேண்டிய அவ சியம் இருந்திருக்காது. ஒரு உயிரைப் பலி கொண்ட மாபாவி என்ற அவச் சொல்லும் எனக்கு ஏற்பட்டிருக்காது. இந்தப் பாவத்தை நான் எப்படிக் கழுவப் போகிறேன்? என்று தன்னைத்தானே நிந்தித்தபடி தளர்ந்த நடை யுடன் பேருந்து நிலையத்தை இலக்கின்றிச் சுற்றி வந்தார். இறுதியாக மனதில் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவராகச் சிதம்பரம் செல்லும் நகரப் பேருந்தில் ஏறினார்.

உசேன்பாய் மருத்துவமனையை அடைந்த போது மணி மூன்று இருக்கும். யாரிடத்தில் விசாரிப்பது எனத் தயங்கியபடி பார்வையைச் சுற்றும் முற்றும் ஓட்டினார். அந்த நேரம் பார்த்து நர்ஸ் அம்மா ஒருவர் எதிரில் வரவே, அவரிடம் விவரத்தைச் சொல்லி விசாரித்தார். நர்ஸ் அம்மா பக்கத்து அறையைக் காட்டி விட்டு நடந்தார்.

வேகமாக அறைக்குள் ஓடிய உசேன்பாய், கிழவரின் நிலையைக் கண்டதும் அதிர்ந்து போய் அங்கேயே நின்று விட்டார்.

தலையில் பெரிய கட்டு போடப்பட்டுச்

"பாங்க்ல கொள்ளை நடக்கறது அதிகமா யிட்டு வர்றதே, இதைத் தடுக்க நீங்க என்ன நடவடிக்கை எடுக்கறீங்க?"

"சாயங்காலம் வேலை முடிஞ்சதும் எங்க பாங்க் நேம்போர்டைக் கழட்டி வீட்டுக்கு எடுத்திட்டுப் போயிருவோம்!"

— இடைப்பாடி ஜெ. பாலா




சுயநினைவிழந்து படுக்கையில் துவண்டு கிடந்தார் முதியவர். பக்கத்தில் நிறுத்தப்பட்டிருந்த ஸ்டாண்டில் தலைகீழாகத் தொங்கிக் கொண்டிருந்த பாட்டிலிலிருந்து மெல்லிய குழாய் வழியே சொட்டுச் சொட்டாய் இரத்தம் இறங்கிக் கொண்டிருந்தது.

காட்டுக்குப் போகிற வயதிலும் முடங்கிக் கிடக்காமல் ஓடி ஓடி உழைத்த முதியவரை மரணப் படுக்கையில் தள்ளிய குற்ற உணர்வு அவரை வாட்டி வதைத்தாலும் முதியவரின் உடம்பில் உயிர் ஒட்டிக் கொண்டிருப்பதை நினைக்கையில் சற்று ஆறுதலாக இருந்தது. படுக்கையில் நெருங்கி முதியவரைக் கண்காணித்துக் கொண்டிருந்த நர்ஸ் அம்மாவிடம் முதியவரின் நிலை பற்றி விசாரித்தார்.

"நல்லவேளை, ரொம்ப ரத்தம் வெளியாகறதுக்குள்ள கொண்டு வந்துட்டாங்க. அபாயக் கட்டத்தைத் தாண்டிட்டாரு. இந்தப் பாட்டில் இரத்தம் இறங்கினா அவருக்குத் தெம்பு வந்துடும். ஆனா இன்னைக்கு அவர்கிட்டப் பேச்சு கொடுத்துத் தொந்தரவு செய்யறது நல்லதில்லை!" என்ற நர்ஸ் அம்மாவின் நம்பிக்கை வார்த்தைகள் உசேன்பாயின் வயிற்றில் பாலை வார்த்தன. அங்கேயே மண்டியிட்டு அல்லாஹ்வைத் தொழுதுவிட்டு மருத்துவ மனையிலிருந்து வெளியே வந்தார்.

'மருத்துவ மனையிலிருந்து முதியவர் டிஸ்சார்ஜ் ஆகக் குறைந்தது இரண்டு தினங்களாவது ஆகும். அதற்குள் நாகூர் சென்று காணிக்கையைச் செலுத்தித் திரும்பி விடலாம்' என யோசித்தவருக்கு 'கடனாளியின் தர்மத்தையும் ஹஜ்ஜையும் இதர நன்மைகளையும் அல்லாஹ் ஏற்பதில்லை' என்ற இஸ்லாம் கோட்பாடு நினைவுக்கு வரவே, தன் எண்ணத்தைக் கைவிட்டார். முதியவருக்குச் சுயநினைவு திரும்பியதும் அவருக்குச் சேர வேண்டிய ஒரு ரூபாயைக் கொடுத்துவிட்டு அவரிடம் மன்னிப்பு கேட்டுப் பிறகு பயணத்தைத் தொடர்வதுதான் ஆண்டவன் விரும்பும் செயலாக இருக்கும் என்ற முடிவுக்கு வந்து எதிரில் இருந்த டீக்கடையில் டீயும் பன்னும் சாப்பிட்டு மருத்துவ மனைக் குறட்டிலேயே படுத்துத் தூங்கி அன்றைய இரவைக் கழித்தார்.

பொழுது விடிந்ததும் முதல் ஆளாக முதியவரைப் பார்க்க ஓடினார் உசேன்பாய். இரத்தம் இறங்கிய பாட்டில் அகற்றப்பட்டுச் சற்றுத் தெம்பு வந்த நிலையில் முதியவர் படுக்கையில் உட்கார்ந்திருப்பதைக் கண்டதும் மனத்தில் மகிழ்ச்சி பொங்க அல்லாஹ்வுக்கு நன்றி சொன்னபடியே ஓடிச் சென்று அவரின் கைகளைப் பற்றிக் கொண்டார்.

முன்பின் அறிமுகமில்லாத புதியவர் ஒருவர் தன் கைகளைப் பற்றிக் கொண்டதில் அதிர்ச்சியும் ஆச்சரியமும் ஒரு சேர தாக்கப்பட்ட முதியவர், உசேன்பாயைப் பார்த்து மிரள மிரள விழித்தார்.

முதியவரின் கைகளைப் பற்றிக் கொண்ட உசேன்பாய், "உங்களை இந்த நிலைமைக்கு ஆளாக்கிய கொடியவன் நான்தான்!" என்று சொல்ல வாயெடுத்து, வார்த்தைகள் வராமல் வெடித்துக் கொண்டு அழுதார். கண்களில் இருந்து கண்ணீர் மட்டுமே தாரைத் தாரையாக வழிந்தது.

முதியவருக்கு ஒன்றும் புரியாவிட்டாலும் உசேன்பாய் அழுவதைக் கண்டதும் மனதைப் பிசைந்தது. விவரம் புரியாமலேயே அவரும் கவலைப்பட்டார். பிறகு உசேன்பாயின் அழுகைக்கான காரணத்தைத் தெரிந்து கொள்ள வேண்டி, "நீங்க யாரு?...ஏன் அழறீங்க?" என்ற கேள்விகளைக் கேட்டார்.

முதியவர் கேட்டது உசேன் பாயின் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. அந்த நேரத்தில் ஒரு ரூபாய்க்காகப் பேருந்தின் பின்னால் முதியவர் ஓடிவந்த கற்பனைக் காட்சிதான் அவர் மனத்திரையில் திரும்பத் திரும்ப ஓடிக் கொண்டிருந்தது. முடிவில் மருள் வரப்பெற்றவர் போல் ஆவேசம் கொண்டு கிழவரின் எலும்புக் கூடாகிப்போன உடம்பையும் ஒட்டிய வயிறையும் கண்கள் தெறிக்க மாறி மாறிப் பார்த்துவிட்டு, "இந்தத் தள்ளாத வயதிலும் உங்களை ஓட ஓட விரட்டிச் சம்பாதிக்க வைத்தது இந்த ஒரு சாண் வயிறுதானே? அதனால் தானே இத்தனைக் கஷ்டங்களும்!" என்று உரத்தக்குரலில் கத்திக் கொண்டே முதியவரைப் பிடித்து உலுக்கினார்.

முதியவர் ஒன்றும் புரியாமல், 'ஏதோ சித்தப்பிரமை பிடித்தவர் போலும்!' என நினைத்து இரக்கத்துடன் அவரைப் பார்த்தார்.

உசேன்பாய் அதோடு விட்டுவிடவில்லை. "நாகூர் தர்கா உண்டியலும் ஏழை வயிறும் ஒன்றுதான்! காணிக்கையை இங்கேயே செலுத்தினா ஆண்டவனுக்குப் போய்ச் சேர்ந்துடும்!" என்று சொல்லிக் கொண்டே ஜிப்பா பைக்குள் வேகமாகக் கையை விட்டு ரூபாய் நோட்டுக்கள் அத்தனையையும் எடுத்துக் கிழவரின் கையில் திணித்து விட்டுத் தன் கடமை முடிந்ததென மருத்துவமனையை விட்டு வேகமாக வெளியேறினார்.

மற்றொரு மாபெரும் முன் வெளியீட்டுத் திட்டம்.

**சலுகை குறிப்பிட்ட தேதி வரையில்தான்**

## உரைநடையில்

# வால்மீகி இராமாயணம்

(ஆசிரியர்: வியாசபாரத உரைநடை ஆசிரியர் இலக்கியத் தென்றல் வஜ்ரோதி M.A.)

| | |
|---|---|
| நான்கு தொகுதிகள் ரூ. | 400.00 |
| சலுகை 25% ரூ. | 100.00 |
| | 300.00 |

**பணம் அனுப்பக் கடைசி தேதி : 7.9.95**
**நூல்கள் நவம்பர் முதல் வாரத்தில் அனுப்பப்படும்.**

வால்மீகி முனிவர் செய்த இராமாயணமும் வேத வியாசர் செய்த மகாபாரதமும் இதிகாசங்கள் எனப் படும். இந்த இரண்டில் இராமாயணம் வடமொழிக் காப்பியங்களுக்கு எல்லாம் ஆதி காவியம் எனத் தகும் சிறப்பு வாய்ந்தது. நான்மறையால் அறியத்தக்க பரம புருஷன் இராமராக அவதரிக்கவே, நான்மறையும் வால்மீகியின் திருநாவிலிருந்து இராமாயண வடிவம் கொண்டு வந்தது என ஆன்றோர் கூறுவர்.

நாரதர் வாக்கிலிருந்து இராம கதையைக் கேட்ட வால்மீகி முனிவர், ஒரு நாள் காட்டில் சென்று கொண்டிருந்தார். அப்போது ஆணும் பெண்ணுமான இரண்டு அன்றில் பறவைகள் இணைந்து இன்பம் அநுபவித்துக் கொண்டிருந்தன. வேடன் ஒருவன் ஆண் அன்றிலை அம்பினால் குறிபார்த்து அடித்தான். அது வேதனையால் துடித்தது. அதனைக் கண்டு துன்பத்தால் வருந்திய வால்மீகி தன்னை அறியாமலேயே சபித்தார். அந்தச் சொற்கள் அழகிய சுலோகமாக வெளிப்படுவதைக் கண்டு தாமே வியந்தார். அதைப் பற்றிய சிந்தனையில் அவர் ஆழ்ந்திருந்த போது பிரமதேவன் நேரில் காட்சி அளித்தார். இராமனுடைய சரித்திரத்தை வால்மீகி வாயிலிருந்து வந்த சந்தத்தில் அமைத்துப் பாட வேண்டும் என்று அருளி மறைந்தார். பின் பல்லாயிரம் சுலோகங்களாக வால்மீகி இராமாயணத்தைப் பாடி முடித்தார்.

அறம் பொருள் இன்பம் என்பவற்றில் முதலாவதாகிய அறத்தை இராமனும், பின்னுள்ள பொருள் இன்பங்களை இராவணனும் தங்கள் இலட்சியமாகத் தேர்ந்தெடுக்கின்றனர். இராவணன் கடுந்தவம் புரிந்து தேவர்களையும் தலை மிதித்து நிற்கும் ஆட்சிப் பேற்றை வரமாகப் பெறுகின்றான். இராமரோ தம் வாழ்க்கையையே ஒரு பெருந் தவமாகச் செய்து, அறத்தைக் கடைப்பிடித்து, உலகத்தைக் காப்பதே தம்முடைய வாழ்வின் பயனாகக் கருதிச் செயல் புரிகின்றார்.

இராமனுக்கும் சீதைக்கும் இடையே உள்ள அன்புக்குச் சமமான அன்பு உலக இலக்கியங்களில் காண்பதரிது. அந்த அன்பே தருமத்தின் அரணாகிறது.

கதையில் வரும் மற்ற பாத்திரங்களும் உயிர் ததும்பி நிற்கிறார்கள். அண்ணனுக்குப் பணிவிடை செய்வதில் நிகரற்று விளங்கும் இலக்குவன், அண்ணன் சொல்லைச் சட்டமாக ஏற்றுச் செயல்படும் பரதன், தாயன்பே உருவான கோசலை, ஞானியான சுமித்திரை, செருக்கு வாய்ந்த கைகேயி, சற்றே காமத்தால் ஏமாந்து தருமத்தால் கட்டுண்டு துடிக்கும் தயரதன், தூய்மை உள்ளத்தில் குடிகொண்ட இராம பக்தியால் செய்ய முடியாத செயல்களைச் செய்த அநுமன், இணையற்ற தோழனான சுக்கிரீவன், நெறியற்ற வழியில் சென்ற இராவணனைத் துறந்து இராமனைச் சார்ந்த விபீஷணன், தவறென்று தெரிந்தும் அண்ணன் என்ற பாசத்துக்குக் கட்டுப் பட்டு உயிர் துறந்த கும்பகருணன் ஆகிய இவர்கள் போன்ற நூற்றுக் கணக்கான பாத்திரங்களை மறக்க வொண்ணா வகையில் தோற்றுவித்துள்ளார் வால்மீகி. இத்தகைய மாந்தர் வாயிலாகக் கவி உலகப் போக்கையும், மனித இதயங்களின் மர்மங்களையும், அழிவில்லாத தருமத்தையும் ஒருங்கே விளக்குகிறார்!

இல்லந்தோறும் இருக்க வேண்டிய தெய்வீக நூல் இது! முதல் ஆறு காண்டங்களோடு ஏழாவது காண்டமாகிய உத்தரகாண்டமும் இதில் உண்டு.

சலுகை விலையான ரூ.300ஐ **செப்டம்பர் 7** ஆம்தேதிக்குள் அனுப்புக. புத்தகங்களை **நவம்பர்** மாதம் முதல் வாரத்தில் அனுப்புகிறோம். வழக்கம் போல் தபால் செலவினைத் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறுக. மேற்குறித்த தேதிக்குள் பணம் அனுப்புவோர்க்கு மட்டுமே இந்தச் சலுகை என்பதை மீண்டும் நினைவுபடுத்துகிறோம். வெளியூர் காசோலை (cheque) ஏற்ப தற்கில்லை.

M.O. (அ) D.D. அனுப்ப வேண்டிய முகவரி:

**VARTHAMANAN PATHIPPAGAM,**

*ARR Complex*

*141, North Usman Road, T. Nagar, Madras-17*

*(Near Panagal Park)* ☎ : 8257995

●● சென்னை பல்கலைக்கழக அஞ்சல் வழி M.A. Economics, 1992-93 க்குப் பிறகு கொணர்ந்த Study Materials, வினாத்தாள்கள் தேவை. Subjects : Micro and Macro Economic Analysis, Economics of Growth and Planning and Statistics for Economics. விலை இருப்பினும் எழுதவும்.

– என். பாலசுப்ரமணியன்,
No. 385, 8th Street,
East Marred Pally,
Secunderabad - 500 026.

●● Golden Sewing Thread rewinder machine மற்றும் 100% Spun Polyester Yarn (sewing) தமிழ் நாட்டில் கிடைக்குமிடம் தெரிவிக்கவும்.

- B. சங்கர்,
5A, படவட்டம்மன் கோயில் தெரு,
புதுப்பாளையம்,
கடலூர் - 607 001.

●● தேதியூர் சுப்பிரமணிய சாஸ்திரி விளக்கம் எழுதிய சௌந்தர்ய லஹரி நூல் தேவைப்படுகிறது. சன்மானம் உண்டு.

- ஏ.எம். ராஜ்,
9/20, மெயின் ரோடு,
முக்காணி (அஞ்சல்)
628 151.

●● சால்வை, ஸ்வெட்டர் பின்ன உல்லன் நூல் மொத்தமாகத் தேவைப்படுகிறது. தொடர்பு கொள்ளவும்.

– மல்லிகா கிருஷ்ணராஜ்,
4B, ராஜா தெரு,
திருவாரூர் - 610 002.

●● சாம்பமூர்த்தி சாஸ்திரிகளால் தொகுக்கப்பட்டு 1979 ல் வெளியான ஜகத்குரு திவ்ய சரிதம் நூல் விலைக்குத் தேவை.

– ஜி. சந்தானம்,
96, கற்பகம் நகர்,
சேலையூர் (அஞ்சல்),
சென்னை - 73.

●● மனநிலை குன்றிய குழந்தைகள் மற்றும் முதியோர்களுக்கான சேவை மனப்பான்மையுடன் கூடிய ஸ்தாபனம்.

– ஆக்ஸ்போர்டு முதியோர் இல்லம்,
பிரியாநகர்,
ஊரப்பாக்கம் - 603 202.

●● விவேக சிந்தாமணி நூல் தேவை. உரிய விலை தருகிறேன்.

– என். சுரேந்திரன்,
யுவராஜ் இன்டர்நேஷனல்,
மண்ணரை, திருப்பூர் - 7.

●● மனநோய்க்கு சிகிச்சை பெறுகிற, ஆனால் சொல்வதைப் புரிந்து கொண்டு ஒத்துழைக்கிற 35 வயது திருமணமாகாத பிராமண இளைஞரைத் தங்களுடன் வைத்து காப்பாற்றும் சேவை உணர்வு கொண்ட குடும்பம்/ஆசிரமம்/விடுதி தேவை. அவருக்கு தமிழ், ஆங்கிலம் தட்டச்சும் கணக்கு எழுதவும் தெரியும்.

– எஸ். இராமசுப்பிரமணியன்,
நத்தகாடையூர் - 638 108.

●● M.B.A. நுழைவுத் தேர்வுக்கான Study Materials (93-94) மாதிரி வினாத்தாள்களுடன் விற்பனைக்கு உள்ளது.

– ந. ஸ்ரீனிவாசன்,
8, சீதா நகர், 2வது தெரு,
சென்னை - 600 034.




●● பாதிக் ஓவியம், ரங்கோலி கோலம் ஆகியன கற்றுக் கொள்ள விருப்பம். கற்றுத் தருபவருக்கு சன்மானம் தரப்படும். கே.கே.நகர் அல்லது சுற்றுப்புறத்தில் உள்ளோர் மட்டுமே தொடர்பு கொள்ளவும்.

– நிர்மலா,
107, பொன்னம்பலம் சாலை,
கே.கே.நகர்,
சென்னை - 78.

●● H.W. Fowler சகோதரர்கள் எழுதிய The King's English என்ற புத்தகம் (1906) தேவை. விலைக்கு வாங்கிக் கொள்கிறேன்.

– எஸ். கல்யாணராமன்,
33, பச்சையப்பா தெரு,
கும்பகோணம் - 612 001.

●● நெய்வேலி மந்தாரகுப்பம் பஸ் ஸ்டாண்டில் திருமண போட்டோ நெகடிவ் தொகுப்பு ஒன்று கண்டெடுக்கப்பட்டது. உரியவர்கள் தொடர்பு கொள்ளவும்.

- ஆர். கோபாலகிருஷ்ணன்,
பி.இ. 2ம் ஆண்டு,
ஸ்ரீ ராமகிருஷ்ணா இன்ஜினீரிங் கல்லூரி,
வ.மா. பாளையம், கோவை - 22.

*(பாலம் மூலம் இணைகின்ற வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது.)*




தனித்துவம் வாய்ந்த ஒரு நடிகரை, தம் பாணிக்கு இழுத்து, புதிய பரிமாணம் காட்ட வைப்பது என்பது மிகத் தேர்ந்த இயக்குநர்களுக்கே சாத்தியம். கே. விஸ்வநாத் சாதித்திருக்கிறார். அந்த வகையில் இது கமல் படம் அல்ல; விஸ்வநாத் படம்.

தொழிலாளர்கள் நலன் விரும்பும் ஒரு முதலாளி. அவருக்காக உயிரையும் கொடுக்கத் தயாராகத் தொழிலாளர்கள். (அப்பா! தலைப்பு பொருந்துகிறது!) கதை இதுதான்.

வளர்ப்பு மகன், காது கிழியக் கத்தும் வில்லன் ட்ராக்கை மட்டும் விலக்கிப் பார்த்தால் வெகு மென்மையான கதையோட்டம்.

வழக்கமாக அலங்காரத்துக்கு மட்டுமே வந்து போகும் ஆம்னி, ப்ரியாராமன் போன்றவர்களை நடிக்க வைத்திருப்பது - அதுவும் கமலுக்கு ஜோடியாக - பெரிய விஷயம்.

கடல் வாழைக்காய் கம்பெனி முதலாளியாக இயக்குநரே செய்திருப்பது கூடுதல் விசேஷம். நடிப்பு இல்லாத நடிப்பு அது. சில கட்டங்களில் கமலே செகண்ட் ஹீரோவாகிவிட வேண்டிய சூழ்நிலை! வாழ்க, வளர்க - ஜூனியர் ரங்காராவ்!

சின்னச் சின்ன பாத்திரங்களைச் சடாரென்று உயரே தூக்கி நிறுத்தி விடுவது விஸ்வநாத்தின் சிறப்பம்சம்.

இந்தப் படத்தில் 'ஸெமீ'யாக வரும் வைஷ்ணவி (தானா?) அந்த வகை. சோடாபுட்டி கண்ணாடியுடன் இழுத்து இழுத்துப் பேசி, சடாரென்று உருகி, ஒட்டிக் கொள்கிறார்.

அவ்வண்ணமே அந்த துலுக்க சாமந்திப் பூ!

கமல்- ஆம்னி காதல் வெளிப்படுகிற இடங்களில் என்ன ஒரு வருடல்தன்மை!

ஸ்ரீராமின் கேமரா, ஜாலங்கள் இன்றி, பளிச்சென்று இருக்கிறது. சில லோ-ஆங்கிள் ஷாட்டுகளில் மட்டுமே தனியே தெரிகிறார்.

யாரோ ஒருத்தரை விட்டு விட்டது போல் இல்லை? அ, கமல்! புதுசாகச் சொல்ல என்ன இருக்கிறது? வழக்கம் போல் நேர்த்தி.

— ஆர்.பி.ஆர்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# துரித கடன் வழங்குதல்

## தங்க நகைகளுக்கு

கிராம் ஒன்றுக்கு ரூ. 325/- ரெக்கரிங் டெபாசிட் இல்லை.
மதிப்பீடு கட்டணம் இல்லை.

## வீட்டு சொத்துக்கள்

மீதும் கடன் வழங்கப்படும். நகர எல்லைக்குள் உட்பட்ட
வீட்டு சொத்துக்கள் மட்டும் ஏற்கப்படும்.

(பரிமாற்றங்கள் உறுப்பினர்களுடன் மட்டும்)



DUGAR
BENEFIT FUND LTD

பதிவு அலுவலகம் : "துகர் பில்டிங்" 7, பெத்து நாயக்கன் தெரு,
(வால்டாக்ஸ் சாலையிலுள்ள பத்மநாபா திரையரங்கிற்கு அடுத்த சாலை)
சென்னை - 600 079. போன் : 516161/517481.
ஃபேக்ஸ் : 044- 522 2888 கிராம்ஸ் : "துகர் சன்ஸ்"





RPS / DUGAR - 95

REGISTERED NO. M. 4392 M. 4392
Registered as Newspaper in Srilanka

சிகரத்தின் உச்சியிலே தனித்து நிற்கும் ஒனிடா கேஷய். தன்னிகரற்ற டிவியின் அனைத்து சிறப்பம்சங்களுடன் காத்திருக்கிறது.

சரி நிகர் போட்டிக்காக ... கடுமையான சவாலுக்காக. சவால் எனில் எப்படிப்பட்ட பிராண்டு களிடமிருந்து ... ஒனிடா கேஷய்யின் மகா சக்தி வாய்ந்த மாஸ்டர் கமாண்ட் கன்ட்ரோல் ...

உலகின் முதன் முதலான கராவ்கே தேர்வுடன் கூடிய 53 செமீ டிவியின் வெல்ல முடியாத தரம்...

அல்லது வீட்டிலேயே அரங்க ஒலியின் அனுபவத்தைத் தரும் இதன் ஜி-ஹூரான் ஒலி, இவற்றைக் கண்டு மிரளாத பிராண்டுகளிடமிருந்து. உலகிலே முன்னேற்றம் கண்ட சில நாடுகளில் இப்போது இதே போன்ற பிராண்டுகள் மெதுவே தலை தூக்கி இருக்கலாம்.

ஆனால் அவற்றோடும் போட்டியிடத் துடியாய் துடிக்கிறது ஒனிடா கேஷய். வெற்றி வாகை சூடப் போவது ஒனிடாதான் ... மற்றவரை காக்கப்போவது கடவுள்தான்.




இந்தியாவிற்குப் பெருமை ...
உலகிற்குப் பொறாமை.

இது தெள்ளத் தெளிவு.
ஒரு இந்திய பிராண்ட் காத்திருக்கிறது
சர்வதேச போட்டிக்காக